# முதலுதவி

ஆசிரியர் :
அ. திருமலைமுத்துசுவாமி
நூலகத்துறைத் தலைவர்
தியாகராசர் கல்லூரி
மதுரை.

பதிப்பாளர் :
திண்டுக்கல் பப்ளிஷிங் ஹவுஸ், திண்டுக்கல்.
மதுரை : சென்னை—1.

 1957 [ விலை : ரூ. 1—4—0



கல்லூரித் தலைவர்

உயர்திரு **I. N. மேனன்,** M.A., B. Litt. (oxen)

அவர்களுக்கு

இந்நூலை உரிமை ஆக்குகின்றேன்.



Lieut *P. P. Chinnadurai* (N C C)
OFFICER COMMANDING

A' COMPANY,
2nd MADRAS Bn NCC.
Thiagarajar College,
MADURAI: 10th April 1957

# Foreward

I have gone through "முதலுதவி", a book on First Aid in Tamil by my esteemed friend, Sri A. Thirumalaimuthuswamy and have been greatly impressed and benefited by its contents.

Sri Thirumalaimuthuswamy has taken great pains to include all the important features of first aid, which nowadays has become a thing to be learnt by one and all, be he a Teacher, Student, Factory worker, Bus conductor, Official or Businessman. In fact, a knowledge of first aid will help one in saving the precious lives of many fellow beings, if not one's own, in an emergency.

First Aid has been introduced as a subject to be studied by Cadets of the National Cadet Corps for their certificate examinations and this book, written in the mother tongue of the cadets must help them a good deal indeed in grasping the subject.

It is common knowledge that books of this type, especially in Tamil, are few and far between. Sri Thirumalaimuthuswamy's efforts in bringing out one in Tamil deserves to be commended and encouraged by every one. He has put the whole book in the shape of dialogues, which, I am sure, will help readers to go through it with lively interest.

I consider this book to be one which should find a place not only in our libraries but also in every office, industrial establishment and most important of all, every home.

In wishing the book all success, I cannot help feeling that the author should attempt books on other such topics which would be of great value to the public at large.

Jai Hind!

**Capron Hall Middle & Training Schools for Girls**
(DIOCESE OF MADURAI & RAMNAD)

MRS. S. VAIRANAPILLAI, M.A., (COLUMBIA) B.A., L.T., CORRESPONDENT.

MADURAI, SOUTH INDIA.

The village teacher's house caught fire and within a few minutes the whole house was in flames. In trying to put the fire out, the teacher did not realise that his wife's arm had been badly burnt. The villagers who saw it first applied dirt and other things on the burnt arm with good intentions. But alas! something which they had applied was full of bacteria and the wound turned septic as a result of which the teacher's wife spent six anxious months in the Government Hospital in Chittoor.

This is only one of many incidents which happen every day in our villages. Falling from trees, falling into wells and suffering from snake-bites are very common in villages.

A book like this written in a simple style, in an interesting manner and in a narrative form will be a great boon to our rural people particularly to all rural social workers who can teach the elementary principles of First Aid to Members of Youth Clubs, Women's Clubs etc. in villages. This book can be used with great benefit in all schools training men and women for rural service.

I have great pleasure in introducing this valuable book to all who are interested in the welfare of the common people who have no easy access to Hospitals and Doctors.

S. VAIRANAPILLAI,

20—4—57.

Dr. S. Kanthimathy Nathan
RTD. GOVT. MEDICAL OFFICER &
CITY HONY. MAGISTRATE.

MADURAI.
DATED 1-5-1957.

It is really praiseworthy that a book of this type in First Aid has been brought out in Tamil in a simple lucid style by the able Tamil Scholar Mr. Thirumalaimuthuswamy. The conversational talk in the First Aid is highly impressive and instructive. It appeals to the young mind and creates a desire to become a First Aider at the earliest moment. Considering the values of life-saving processes in the First Aid, every Indian, male or female should get trained in the art and I am sure a book of this type is a necessity in these hurry burry days when we are having frequent accidents of every type in the fields of quick transports, mechanical and electrical reformation, industrial advancement and atomic tests and explosions.

S. Kanthimathinathan

# ஆசிரியர் முன்னுரை

1955-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 16-ஆம் நாள் எனது வாழ்க்கையில் மறக்கமுடியாத நாளாக அமைந்தது. அன்று எனது தம்பி சுப்பிரமணியனுக்கு ஆபத்து ஒன்று ஏற்பட்டது. எனது வீட்டின் பக்கத்திலேயே முனிசிபல் லாரி ஒன்றினல் மோதப்பட்டான். அவனது வலது கையின் மத்திய பாகம் நசுக்கப்பட்டது. கை இரண்டு துண்டாகவே ஆயிற்று. பின்புறம் மாத்திரம் தோலினல் ஒட்டிக்கொண்டிருந்தது.

அன்று நான் வீட்டில் இல்லை. வீட்டில் இருந்த பெண்களும் அறியார்கள். எனது நண்பர்களில் சிலர் செய்தி தெரிந்தார்கள். அரசாங்க மருத்துவக் கூடத்திற்கு அவனை எடுத்துச் சென்ருர்கள். எனக்கும் அவர்கள் செய்தி அறிவித்தனர். நானும் மருத்துவக்கூடம் வந்தேன். மருத்துவர்கள் எனது தம்பியின் உயிருக்கே மன்ருடினர். தவிர அறுபட்ட கையைத் துண்டிக்காது ஒட்ட வைப்பதற்கே முயன்றனர். மூன்று மாதங்கள் எனது தம்பி மருத்துவக் கூடத்தில் இருந்தான். அங்குள்ளார் அனைவரும் காட்டிய அன்பு என்றும் மறக்கற்பாற்றன்று. அவர்கள் யாவர்க்கும் எனது மனம் உவந்த நன்றி உரித்தாகின்றது.

எனது தந்தையார் எங்களைப் பார்க்க வந்தார்கள். ஒவ்வொரு சனி, ஞாயிறும் வந்தார்கள். நானும் எனது தந்தையாரும் மருத்துவக் கூடத்திலேயே நாட்களைத் தள்ளினேம். அவர்கள் சாரணர் இயக்கத்தில் இருபது

ஆண்டுகள் சேவை செய்தவர்கள். செஞ்சிலுவைச் சங்கத்திலும் ஐந்தாண்டுகள் அனுபவம் பெற்றவர்கள். அவர்கள் தங்களது முதிர்ந்த அனுபவத்தை என்னிடம் கூறினார்கள். ஒவ்வொரு ஆபத்தையும் கூறி அதற்குரிய முதல் உதவியையும் எடுத்துக் காட்டினார்கள். அவர்கள் சொல்லியதை அவ்வப்பொழுது குறித்து வைத்திருந்தேன். அதுவே இறுதியாக இப்புத்தக உருவில் வெளிவரலாயிற்று.

ஆபத்து எவர்க்கும் எந்நேரத்திலும் எவ்வுருவிலும் வரும். தகுந்த மருத்துவர்கள் கிராமங்களில் இல்லை. இதைப் படிப்பதால் ஒவ்வொருவரும் ஆபத்தில் முதல் உதவி செய்யலாம். உயிரை முதல் உதவியால் காக்க வேண்டும். அவ்வுயிர் நிலைத்து நிற்க மருத்துவர் பின் வழி செய்வார். முதல் உதவி செய்பவர்களே ஒருவனது உயிர் காக்க முதற்படியாக விளங்குகின்றனர். ஆகவே இந்நூலை நன்கு கவனித்துப் படிக்கவேண்டும். அயலார்க்கு ஆபத்து ஏற்படலாம். அவ்வேளையில் இதில் கூறிய வழிகளை ஒட்டி உதவிசெய்யவேண்டும். இந் நூலைத் தமிழுலகம் நன்கு வரவேற்குமென எண்ணுகின்றேன். இந்நூலிற்கு அணிந்துரை அளித்துள்ள அன்னையாருக்கும் அன்புப் பெரியார்களுக்கும் என் உளங்கனிந்த நன்றி.

அ. தி.

# பொருளடக்கம்



பக்கம்

1. முதலுதவி ... ... 1
2. நீர் மூழ்கி நினைவு இழந்தோர்க்குச் செய்ய வேண்டிய முதல் உதவி ... 7
3. நெருப்புப் பற்றியவருக்கு உரிய முதல் உதவி ... 15
4. திக்குமுக்காடலுக்கு உரிய முதல் உதவி ... 24
5. எலும்பு உடைந்ததற்குச் செய்யவேண்டிய முதல் உதவி ... 33
6. இரத்தம் கொட்டுதலுக்கு உரிய முதல் உதவி ... 43
7. மயக்கம் போடுதலுக்குச் செய்ய வேண்டிய முதல் உதவி ... 54
8. விட உபாதைகளுக்கு உரிய முதல் உதவி ... 61
9. விடக்கடிக்கு உரிய முதல் உதவி ... 67



# 1. முதலுதவி

தோற்றுவாய்

திருநெல்வேலி மாவட்டத்தைப் பல சிறு வட்டங்களாகப் பிரித்துள்ளார்கள். அவற்றுள் நான்குநேரியும் ஒரு சிறு வட்டமாகும். அந் நான்குநேரித் தமிழாசிரியர் திரு. அருணாசலம் பிள்ளை அவர்கள். அவர்களது வாழ்க்கைத் துணைவியார் திரு. மங்கையர்க்கரசி அம்மையார். அவர்கள் இருவருக்கும் ஐந்து குழந்தைகள். அவர்களுள் சங்கரவள்ளிநாயகம், சுப்பிரமணியன் என்ற இருவரும் ஒரு நாள் பள்ளிக்குச் சென்று மாலையில் வீடு நோக்கி வந்துகொண்டு இருந்தனர். கூட்டம் இல்லாத காலத்திலும் பலர் ஓரிடம் வந்து கூடும்படி செய்பவன் (சுப்பிரமணியன்) மணி. பேசுவதில் காலம் கழிக்கும் (சங்கரவள்ளிநாயகம்) சங்கரன் கூட்டம் ஒன்றைக் கண்டால் விடுவானா?

இருவரும் தங்களுக்கு எதிரில் ஆண்களும் பெண்களும் கூடி இருப்பதைக் கண்டனர். ஆகவே இருவரும் அக்கூட்டத்தை நோக்கி விரைந்து சென்றனர். அக்கூட்டத்திலுள்ள அனைவரும் ஒரே அழுகை அழுது கொண்டு இருப்பதைப் பார்த்தனர். அவர்கள் நடுவில் பத்து வயதுப் பாலகன் ஒருவன் உணர்ச்சி அற்றுப் படுத்திருப்பதையும் கண்டனர்.

அப்பொழுது பெண் ஒருத்தி தனது பக்கத்தில் நின்றுகொண்டிருந்த மற்று ஒருத்தியைப் பார்த்து "ஐயோ, பாவம். இச்சிறுவன் நான் குளித்துக்கொண்டு இருக்கும்

பொழுது குளிக்க வந்தான். அவன் படி வழுக்கி உள்ளே விழுந்தான். சிறிது நேரம் அவன் தண்ணீரில் மூழ்கி இருந்தான். அவன் முங்கு நீந்தலில் இருக்கின்றான் என்று நான் முதலில் நினைத்தேன். பின் சிறிது நேரத்தில் தனது இரண்டு கைகளையும் பரப்பிக்கொண்டு தண்ணீரின் மேலே மிதந்தான். அப்பொழுதுதான் நான் அவனுக்கு நீந்தத் தெரியாது என்பதை அறிந்தேன். உடன் அவனது குடுமியைப் பிடித்து அவனை இழுத்து வெளியில் கொண்டு வந்து இங்கு நான் கிடத்தியதும் பக்கத்தில் இருந்தவர் களும் பள்ளிப் பிள்ளைகளும் வந்து கூடினர். பள்ளிப் பிள்ளைகளில் யாராவது ஒருவனுக்கு ஒரு செய்தி எட்டி னால் போதுமல்லவா? அச்செய்தி விரைவில் காட்டுத்தீ போன்று எங்கும் பரவிவிடும் அல்லவா? எப்படியோ இப்பையனது தாய், தகப்பனார், பந்துக்கள் யாவரும் ஓடோடியும் வந்து நின்று இங்கு அழுதுகொண்டிருக் கின்றனர். மான் கன்று போன்று, அடிபட்ட மயில் போன்று படுத்திருக்கும் பாலகனைப் பார்க்கப் பார்க்க வீடு செல்வதற்கு என் கால் எழமாட்டேன் என்கிறது" என்று சொல்லி தனது கண்களில் நீர்வடித்து நின்றாள். இதையும் அண்ணனும் தம்பியும் ஆகிய சங்கரனும், மணி யும் நின்று கேட்டனர்.

திடீரென்று ஒருவர் கூட்டத்தின் மத்தியில் கிடந்த பையன் அருகே சென்றார். பக்கத்தில் சூழ்ந்து நின்ற மக்களைச் சற்று தள்ளி நிற்கும்படி வேண்டினார். அவன் படுத்து இருக்கும் இடத்தில் காற்று நன்கு வீசும்படி செய்தார். அவன் தோளில் போட்டு இருந்த துண்டு அவனது கழுத்தை இறுக்கி இருப்பதை அறிந்தார்.

உடனே அந்த ஈரத் துண்டை அவனது உடம்பில் இருந்து அகற்றினர். அரையில் வேட்டியை அவன் இறுகக் கட்டியிருப்பதையும் தெரிந்தார். அடுத்தபடியாக அந்த ஈர உடையையும் நீக்கினர். உலர்ந்த உடை ஒன்றைத் தளர்ந்து இருக்குமாறு அவன் இடுப்பில் கட்டினர். பின் அவர் தனது விரலை அவனது வாயில் விட்டுக் குடைந்து குடைந்து பார்த்தார். அங்கு உறைந்து இருந்த பாசியை வெளியில் எடுத்து போட்டார். அவனது கால் கைகளை நன்கு சூடு பிறக்கும்படி தடவிக் கொடுத்தார். அவனது மார்பு சிறிது உயரமாக இருக்கும்படி அவனைக் குப்புறப் படுக்க வைத்தார். அவன் வாயின் வழியாகத் தண்ணீர் வடிந்தது. அதன்பின் அவர் அவனது மார்புக் கூட்டு எலும்பைப் பலமுறை அழுத்திக்கொண்டிருந்தார்.

அப்பொழுது மணி ஏழாயிற்று. முன் இருட்டு வந்து சூழ்ந்தது. கூட்டம் கலையத் தொடங்கிற்று. பலர் பலவாறு பேசினர். மணியும் சங்கரனும் அவ்விடத்தை விட்டு அகல வில்லை. சிகிச்சை செய்கிறவரின் முகத்தில் சிறிது தளர்ச்சி காணப்பட்டது என்றாலும் அவர் தனது முயற்சியில் பின் வாங்கவில்லை. வாட்டமுடன் இருந்த அவர் கண்கள் சிறிது நேரத்தில் ஒளி வீசின. பாலகனுக்கு மூச்சுச் சிறிது சிறிதாக வரத்தொடங்கிற்று. அப்பாலகன் அப்பொழுது 'அம்மா! என் அம்மா எங்கே?' என்று சொல்லிக் கொண்டே எழுந்தான். தன்னைச் சார்ந்தவர்கள் எல்லாரையும் அவன் அங்குப் பார்த்தான். தான் குளத்தில் இறங்கும்பொழுது அங்குக் குளித்துக் கொண்டிருந்த பெண் மகளையும் கண்டான். தனக்கு ஆறுதல் கூறிச் சூடான

பானம் கொடுக்கும் புதியவர் ஒருவரையும் நோக்கினன். அதுகால் அவனது தாய் தந்தையர் இருவரும், அவன் குளிக்கப் போகுஞ் சமயம் குளித்துக்கொண்டிருந்த பெண் ணேயும், முதலுதவி செய்த பெரியாரையும் வணங்கித் தங்களது நன்றியறிதலேத் தெரிவித்தனர்.

யாவரும் தமது வீடு நோக்கி நடந்தனர். பலர் பல வாறு பேசிக்கொண்டு போயினர். தனது அண்ணனைத் தேடிய மணி சங்கரனைச் சந்தித்தான். இருவரும் அவர் களது வீடு நோக்கி நடந்தனர். வரும் வழியில் இருவரும் இந்நிகழ்ச்சியைப் பற்றிப் பேசலாயினர்.

முதலுதவி

**மணி :** சங்கர அண்ணனே! இப்பொழுது நாம் பார்த்த பையன் மாலே ஐந்து மணிக்கு ஏன் செத்தவன் போல் கிடந்தான்?

**சங்கரன் :** அப் பையன் குளிக்கப் போனன். அவனுக்கு நீந்தத் தெரியாது. ஆகவே அவன் தண்ணீரில் மூழ்கிவிட்டான். அவனது மூச்சு நின்று விட்டது. அதனல் அவன் செத்தவனைப் போல் கிடந்தான்.

**மணி :** அவனை அக் கூட்டத்தில் இருந்த பெரியவர் உயிருடன் எழுப்பிவிட்டாரே. எப்படி? அவருக்கு மந் திரம் தெரியுமா?

**சங்கரன் :** அவருக்கு மந்திரம் தெரியாது தம்பி! அவ ருக்குத் தந்திரம் தெரியும். இவ்வாறு நோய் உற்றவர்க்கு நாம் முதலில் நம்மாலான உதவி செய்யலாம். முதலில்

வைத்தியருக்கு ஆள் அனுப்ப வேண்டும். அதன் பின் நாம் மனம் கலங்காது, தைரியமாய் நோயாளியை அடைய வேண்டும். நோய் இன்னது என்று நன்கு தெரிதல் வேண்டும். வைத்தியர் வருமுன் நோயாளிக்கு முதலில் நாம் உதவி செய்தால், அவனை ஆபத்திலிருந்து காப்பாற்ற லாம். அநேக வேளைகளில் வைத்தியரின் உதவி இன்றியே முதல் உதவியிலேயே நோயாளி நோய் நீங்கப் பெற்று உயிர்பிழைப்பான்.

**மணி :** அப்படியா ! அண்ணு ! அப்படியாளுல் முதல் உதவியை யாவரும் தெரிந்து கொள்ளுதல் நலந்தான். மக்களுக்கு ஆபத்து இன்ன வேளை வரும் என்பது இல்லை அல்லவா ? ஆகவே அது பற்றி உனக்குத் தெரிந்ததை ஒவ்வொன்ருக ஒவ்வொரு நாளும் ஓய்வு நேரமாகிய மாலை வேளையில் சொல்லு. நான் தெரிந்து கொள்ளுகிறேன். நான் புதிதாகப் படித்தாற்போல் ஆயிற்று. நீயும் படித்ததை ஞாபகப்படுத்திஞற்போல் ஆயிற்று.

**சங்கரன் :** நான் படித்ததை உன்னிடம் பாராமல் ஒப்பித்தலில் பயன் இல்லை. சில பொது விதிகளை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். சமயத்திற்குத் தகுந்தாற் போன்று சாமர்த்தியமாக நாம் நடக்க வேண்டும். ஒவ்வொரு நாளும் ஓய்வு கிடைக்கும்பொழுது எல்லாம் நீ கேட்டபடி சிறிது சிறிதாக உனக்குச் சொல்லிக் கொடுக் கிறேன். நமது வீடு கிட்ட நெருங்கி விட்டது. இன்று நேரமும் அதிகமாய்விட்டது. இன்று நீ நேரில் பார்த்ததை நாளை நான் உன்னிடம் கேட்பேன். மறக்காது சொல்ல வேண்டும். அப்படியாளுல்தான் நீ கேட்டபடி நான்

செய்வேன். சரி, இப்பொழுது நான் கேட்கும் கேள்விக்குப் பதில் சொல். முதல் உதவி என்றால் என்ன ?

**மணி :** மக்களுக்கு ஆபத்து வருவது இயற்கை. அவ் ஆபத்து இன்னாருக்குத்தான் வரும் என்பதில்லை. யாருக்கும் வரும். அது எவ்வேளையிலும் வரும். அது எவ்வுருவத்திலும் வரும். ஒருவனுக்கு ஆபத்து ஒன்று ஏற்பட்டால் உடனே வைத்தியருக்கு ஆள் அனுப்ப வேண்டும். அவர் வரும் வரையிலும் அவ்வுயிரைப் பாதுகாக்க வேண்டும். அவ்வாறு அவ்வுயிரைப் பாது காத்தற் பொருட்டு முதன் முதலாகச் செய்யும் உதவியே முதல் உதவியாம்.

**சங்கரன் :** நீ நல்ல பையன். ஒரு முறை கேட்ட உடனேயே மிக மிக அழகாகக் கேட்ட செய்தியைக் கூறு கிறாயே. இது போலவே உனது பள்ளிப் பாடத்தையும் ஒழுங்காய் நீ படிக்கவேண்டும். என்ன, தெரியுதா ?

இருவரும் வீடு அடைந்தனர். அன்று இரவு செய்ய வேண்டியதை இருவரும் ஒழுங்காகச் செய்தனர். மறு நாளாயிற்று. இருவரும் பள்ளி சென்று வந்தனர். மாலைப் பொழுதும் வந்தது. மணி மகிழ்ச்சியுடன் சங்கரனிடம் வந்தான். சங்கரனும் மிக உற்சாகமாக அன்று காணப் பட்டான். இருவரும் கடந்த நாள் நிகழ்ச்சியைப் பற்றிப் பேசலாயினர்.

---

## 2. நீர் மூழ்கி நினைவு இழந்தோர்க்குச் செய்ய வேண்டிய முதல் உதவி

**சங்கரன் :** அடே ! மணி. நேற்று நீ பார்த்த பையன் முதன் முதலில் எவ்வாறு இருந்தான் ?

**மணி :** நான் நேற்றுப் பார்த்த பையன் முதலில் செத்தவனாகவே இருந்தான்.

**சங்கரன் :** நீ அவனைப் பார்க்கும்போது மணி என்ன இருக்கும் ?

**மணி :** நான் அவனைப் பார்க்கும்போது மாலை மணி ஐந்திருக்கும்.

**சங்கரன் :** செத்த அப்பையன் உயிர் பெற்ற பொழுது மணி என்ன ?

**மணி ;** செத்த அப்பையன் உயிர் பெற்ற பொழுது இரவு மணி 7–15 ஆகும்.

**சங்கரன் :** நீயும் நானும் அப்பையனைப் பார்ப்பதற்குக் கால் மணி நேரத்திற்கு முன் அவன் நீரில் மூழ்கினான் என்று கேள்விப் பட்டேன். ஆகவே அவனது உயிர் சுமார் இரண்டரை மணி நேரம் உள் அடங்கி இருந்து வெளிப்பட்டது. என்ன ஆச்சரியம் பார் ! இது ஒரு செப்படி வித்தை போல் அல்லவா இருக்கிறது. இது தெரியாத மக்கள் நீரில் மூழ்கி நினைவு தப்பிய குழந்தைகளையோ, பெரியோர்களையோ கவனித்துப் பாராது வீணாகப் புதைத்தோ, சுட்டோ விடுகின்றனர்.

பெரிய நகரங்களிலேயே இப்படி என்றால் சிற்றூர்களில் கேட்பானேன். இவ்வறிவை நன்றாகச் சிற்றூர்களிற் பரப்பவேண்டியது நமது அரசாங்கத்தின் முதற் கடமைகளுள் ஒன்றாகும். சரி, நேற்று நீ பார்த்ததை எல்லாம் சொல்லு.

**மணி :** நேற்று மாலை நான் பள்ளி விட்டு எனது வீட்டிற்குப் போய்க்கொண்டு இருக்கையில் இடையில் கூட்டம் ஒன்று காணப்பட்டது. அதன் மத்தியில் பத்து வயது உள்ள ஓர் பையன் படுத்து இருந்தான். அவனது கருவிழிகள் ஏறச் சொருகி இருந்தன. அவனது உடல் முழுதும் வியர்த்துக் காணப்பட்டது. கழுத்தில் காணப்பட்ட துண்டு கழுத்தைச் சுற்றி இறுக்கிக் கொண்டு இருந்தது. அவனது இடுப்பு உடையும் நன்கு இறுகக் கட்டப்பட்டு இருந்தது. அத் துணிகளில் இருந்து நீர் வடிந்து கொண்டு இருந்தது. பலர் அவன் பக்கத்தில் சென்று அவனைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தனர். அவன் பெயர் சொல்லிக் கூப்பிட்டனர். அவன் அசையாது படுத்து இருந்தான். அவன் பேசாதும் படுத்து இருந்தான். அவன் மூச்சும் விடவில்லை. யாவரும் ஒருங்கே அவன் செத்து விட்டான் என்றே கூறினர். ஆண்களில் சிலரும் பெண்களில் பலரும் கண்ணீர் வடித்துக் கதறி நின்றனர். அப்பொழுது கூட்டத்தில் கலந்து நின்ற ஒருவர் திடீர் என்று கூட்டத்தின் மத்தியில் ஓடிவந்தார்.

**சங்கரன் :** சரி. நிறுத்து உனது பேச்சை. நீ பார்த்ததைப் படம் பிடித்தது போல் சொல்லுகிறாயே. நீ சொல்லும் திறமை பெற்றவன் தான். இனிமேல் அப்பெரியார் அவனுக்குச் செய்ததை விவரமாகச் சொல்லு.

**மணி :** அப்பெரியார் கூட்டத்தின் மத்தியில் வந்தார். அழுகைக் குரலை நீக்கினர். தான் அப்பையனை மந்திரத்தால் உயிர் பிழைக்கும்படி செய்யப்போவதாய்க் கூறினர். அழுகை ஒருவாறு நின்றது. யாவரும் அவரையே நோக்கினர். யாவரையும் அப்பையனை விட்டுச் சிறிது விலகி இருக்கும்படி வேண்டினர். எல்லோரும் அவர் சொன்ன உடனே சிறிது விலகி நின்றனர். நல்ல காற்று நோயாளியின் மேல் வீசிற்று. பையனுடைய கழுத்திலும் இடையிலும் சுற்றி இருந்த ஈர உடைகளை நீக்கினர். உலர்ந்த ஆடை ஒன்றை இடுப்பில் தளர்ந்திருக்கும்படி கட்டினர். அரையடி உயரமுள்ள பக்கத்தில் கிடந்த ஓர் கல்லின் மேல் அவனது உடலின் மத்திய பாகமாகிய இடுப்பை வைத்துக் குப்புறக் கவிழ்த்திப் போட்டார்.

**சங்கரன் :** அடே, மணி! அப்பொழுது அப்பையனின் தலை எவ்வாறு இருந்தது?

**மணி :** அண்ணா! அதுசமயம் அவன் தலை தலை கீழாய் இருந்தது.

**சங்கரன் :** அதன் பின் அவர் செய்தது என்ன?

**மணி :** அப்பெரியார் செத்த பையனுடைய வாயைச் சிறிது வருத்தத்துடன் பிளந்து, தனது கை விரலை உள்ளே விட்டுத் தொண்டை வரையிலும் தடவினர். தடவியதில் உறைந்திருந்த பாசி வெளிவந்தது. பின் அவன் குடித்திருந்த தண்ணீர் வாய் வழியாக வந்தது. அவனது இடுப்பைப் பிடித்து இரண்டு நிமிடம் அலக்காய்த் தூக்கி வைத்திருந்தார். ஒன்றும் பயன்படவில்லை. அவனது

உடம்பில் சூடு வரும்படி பல தடவைகள் தேய்த்தார். அதன் பின்னுங்கூட அவனது உயிர் வரவில்லை.

**சங்கரன்:** "அவன் இறந்து விட்டான். இனிமேல் அவன் எங்கே பிழைக்கப் போகிறான்? செத்து இரண்டு மணி நேரம் ஆயிற்றே!" என்று அங்குக் கூடி நின்ற பலருஞ் சொன்னார்கள் அல்லவா? அப்படியிருந்தும் அப் பெரியவர் என்ன செய்தார்?

**மணி:** பலபேர் பலவிதம் சொல்லும்பொழுது அப் பெரியாரின் முகம் வாடிற்று. என்றாலும் அவர் தன் முயற்சியைக் கைவிடவில்லை. அச்செத்த பையனைக் கீழே குப்புறப் படுக்கவைத்தார். மார்பின் கீழ்ப் பாகத்தின் அடியில் உயரம் ஒன்று வைத்தார். அப் பையனது முகத்தைப் பக்க வாட்டமாகத் திருப்பினார். பின் அவன் இடுப்பின் பக்கம் முழங்காலிட்டுக் குந்தி இருந்தார். அவன் மார்பு எலும்பின் அடிவரிசைகளில் தன்னுடைய இரு கைகளைப் பரப்பித் துருத்திபோன்று அழுத்தியும் தளர்த்தியும் விடுத்தார். அப்பொழுதுதான் அவர் செய்த மந்திரம் பலித்தது. அவனுக்குச் சிறிது சிறிதாக மூச்சு வந்தது. பையனும் 'அம்மா! என் அம்மா எங்கே?' என்று எழுந்தான். அங்கு இருந்தார் அனைவரும் ஒரே மகிழ்ச்சி அடைந்தனர்.

**சங்கரன்:** இப்பொழுது நான் ஒன்று சொல்லப் போகிறேன். கவனித்துக் கேள். ஒரு நாள் நான் நெல்லை போனேன். போகும்பொழுது நான் ஏறிச்சென்ற நெய்யாவி வண்டி திடீர் என்று நின்று விட்டது. அதை ஓட்டுபவரும், அதைக் கண்காணிப்பவரும் வண்டியை

விட்டு இறங்கி வண்டியை ஒருமுறை நன்கு சுற்றிப் பார்த்துவிட்டு யந்திரத்தைத் திறந்து பலமுறை அதைப் பார்த்தனர். அதைத் துடைத்தனர். சிறு உளியால் தட்டினர். தண்ணீர் விட்டனர். கம்பி கொண்டு சுற்றினர். அது ஒன்றுக்கும் ஓடும் சக்தி பெறவில்லை. கடைசியில் அவ்வண்டியை யாவரும் சேர்ந்து தள்ளினோம். உடனே அதுவரை நின்று இருந்த பொறி வேலை செய்யத் தொடங்கிற்று.

**மணி :** நிறுத்தண்ணே நிறுத்து, உனது பேச்சை. இனி நான் சொல்கிறேன் கேள். அந்த நெய்யாவி வண்டி மாதிரி இப்பையனது இருதயம் நின்று விட்டது. அப் பெரிய மனிதர் ஏதேதோ செய்தார். ஒன்றும் பயன் படவில்லை. இறுதியாக அவர் இருதயத்திற்கு அசைவு ஏற்படும்படி மார்புக் கூட்டின் அடியில் அழுத்தித் தளர்த்திய மாத்திரத்து அது வேலை செய்யத் தொடங்கி விட்டது என்று சொல்வதற்குத் தானே அவ்வுதாரணம் எனக்குச் சொன்னாய் அண்ணா! அது சரியான, மிக மிகப் பொருத்தமான உதாரணந்தான் அண்ணா!

**சங்கரன் :** அடே, தம்பி! நீ கெட்டிக்காரன். நிரம்பக் கெட்டிக்காரன். கூர்ந்து கவனிக்கும் சக்தியும் உன்னிடத்தில் அமைந்து இருக்கிறது. சரி. நீரில் விழுந்து நினைவு இழந்தோர்க்கு நாம் செய்ய வேண்டிய முதல் உதவியைத் தெளிவுபடச் சொல்லு.

**மணி :** நீரில் விழுந்து மூழ்கினவர்க்குச் சரியான முதல் உதவி செய்யாததினால்தான் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது பேர் இறந்து விடுகிறார்கள். அவர்கட்குச்

சரியான முதல் உதவி ஏற்படுமானுல் நூற்றுக்கு நூறு பேர் களும் உயிர் பெறுவர் என்பது உறுதி.

முழுகிப் போனவர்களை உயிர்ப்பிக்க முதலில் விடா முயற்சி வேண்டும். சில சமயம் அவர்களுக்குச் செய்ய வேண்டிய உதவி சுமார் இரண்டு மணி நேரங் கூடப் பிடிக்கும். அதுவரையில் அவர்கள் பேச்சு மூச்சு இல்லா மலே இருக்கலாம். அதற்காகப் பயந்து ஒன்றுஞ் செய் யாது கைவிட்டு விடுதல் கூடாது.

முதன் முதலில் வைத்தியருக்குச் சொல்லி விட வேண்டும். நீரில் மூழ்கினவனுடைய ஈர உடையை முதலில் மாற்றி விடவேண்டும். அவனுக்குச் சூடு வரும்படி உடம்பின் பல பாகங்களையும் நன்கு தேய்க்க வேண்டும். அவனது இடுப்பு, கழுத்து முதலியவைகளில் இறுகிய ஆடைகள் இருத்தல் ஆகா. முழுகினவன் தொண்டையில் கை விரலை விட்டு, சேறு, மண், பாசி உறைந்திருந்தால் அவற்றை நீக்க வேண்டும். மூக்கையும் நன்கு கவனிக்க வேண்டும்.

குழந்தையானுல் அதை ஒன்று அல்லது இரண்டு விநாடி தலைகீழாய்ப் பிடித்து, தொண்டையிலும் மார்பி லும் அடைபட்டவைகளை வெளிவரச் செய்ய வேண்டும். வளர்ந்தவன் ஆயின் இடுப்பைப் பிடித்து இரண்டு மூன்று விநாடி தூக்க வேண்டும். தூக்க முடியா விட்டால் அவன் வயிற்றின் அடியில் திரிகை, அம்மி, உரல், கட்டை போன்றவைகளுள் அகப்பட்டது ஒன்றை வைத்து, அவனை அதில் குப்புறப் படுக்கும்படி செய்ய வேண்டும். அப்பொழுது அவன் குடித்த நீர் எல்லாம் வாய் வழியாக



இடுப்பைப் பிடித்துத் தூக்கவேண்டும்

வந்து விடும். வந்த பின் அவன் மூச்சு விடத் தொடங்கு வான். சில சமயம் இவ்வாறான சிகிச்சையில் பேச்சு மூச்சு இல்லாமலும் இருக்கும். அப்பொழுது உதவி செய்பவர் மனம் தளர்ந்து தனது முயற்சியைக் கைவிட்டு விடக்கூடாது. மேலும் கீழ் வருமாறு செய்ய வேண்டும்.

நீரில் மூழ்கினவனைக் குப்புறப் படுக்க வைக்க வேண்டும். மார்பின் கீழ்ப் பாகத்து அடியில் மெத்தை போன்ற மெதுவான துணியாலாகிய அணையை வைக்க வேண்டும். பக்க வாட்டமாக அவன் தலையைத் திருப்பி வைக்க வேண்டும். அவன் இடுப்பின் பக்கம் முழங் காலிட்டுக் குந்தி இருந்து முதுகின் பக்கம் உள்ள மார்பு எலும்பின் அடி வரிசைகளில் இரு கைகளைப் பரப்பி வைக்க வேண்டும். பின் படிப்படியாய் நன்கு அழுத்த வேண்டும். அதன்பின் படிப்படியாய் அழுத்தலைத் தளர்த்த வேண்டும். கைகளை எடுத்து விடாது ஒரு நிமிடத்திற்குப் பன்னிரண்டு தடவை இவ்விதம் அழுத்தியும் தளர்த்தியும் செய்து கொண்டு இருந்தால் சுமார் அரை மணி நேரத்தில் தப்பிய உயிர் தானே அவ்வுடலை வந்து அடையும். இது உறுதி. அதன் பின்னர் அவனுக்குள்ள பயத்தைப் போக்க வேண்டும். இழந்த உயிரைப் பெறுவதற்கு உரிய தந்திரம் ஆகிய மந்திரம் இதுவாகும்.

**சங்கரன் :** நீர் மூழ்கியவருக்கு உரிய முதல் உதவியை நீ நன்கு தெரிந்து கொண்டாய். அன்று கண்டதை அப்ப டியே ஒழுங்கு படுத்திக் கூறினாய். இன்னும் சொல்லு கிறேன், கேள்.

சிற்றூர்களில் நீரில் மூழ்கியவனைத் தலை பக்க வாட்டமாக இருக்கும்படி வண்டிப் பைதாவில் குப்புறக் கவிழ்த்தி வைத்துச் சுற்றுவதும் உண்டு. அவ்வாறு சுற்றும் பொழுது அடைபட்டு இருந்த நீர் வெளி வந்து விடுகிறது. காற்றுப் பையும் இருதயமும் வேலை செய்யத் தொடங்குகின்றன.

பின் இருவரும் மாலைக்கடனை முடித்தார்கள். இரவு தங்களது பள்ளிப் பாடங்களைப் படித்தார்கள். உணவு உண்டு இருவரும் தூங்கினர். மறுநாட் காலை எழுந்து கடமைகளை ஒழுங்காகச் செய்தனர். நாட்கள் பல கழிந்தன.

---

## 3. நெருப்புப் பற்றியவருக்கு உரிய முதல் உதவி

ஐப்பசி மாதமும் வந்தது. அம்மாதத்தில் தீபாவளியும் குறுக்கிட்டது. பள்ளியின் விடுமுறையும் விடப்பட்டது. தீபாவளியன்று அதிகாலையில் எழுந்து, எண்ணெய் தேய்த்துக் குளித்துப் பலகாரமும் சாப்பிட்டு விட்டு ஊரைச் சுற்றி அண்ணனும் தம்பியும் வேடிக்கை பார்த்துக் கொண்டு வந்தனர்.

சிறுபிள்ளைகளும், பெரியபிள்ளைகளும்—ஏன் ? பெரிய மனிதர்களும் பெண்களும் கூடக் கலந்து வெடியைப் போட்டு ஒட்டுத் திண்ணையில் இருந்து வெடிக்கும்படி செய்து கொண்டு இருந்தனர். ஆனைவெடி, குதிரைவெடி, சீனிவெடி, ஓலைவெடி, பாம்புவெடி, குத்துவெடி, கல் வெடி, மிளகாய்வெடி, சரவெடி, ஏரோபிளான்வெடி, அணுக்குண்டு, பென்சில் வெடி, பொட்டு வெடி முதலிய வெடிகளை வெடிக்கச் செய்து களிப்படைந்து கொண்டு இருந்தனர், மத்தாப்பு, கம்பி மத்தாப்பு, சுருள் மத்தாப்பு, கயிறு மத்தாப்பு முதலியவைகளைப் பெரும்பாலும் சிறு பிள்ளைகள் கைகளிற் கொண்டு எரியும் விளக்குகளில் அவைகளைக் கொளுத்தி வேடிக்கை பார்த்துக் கொண்டு இருந்தனர்.

ஒருவன் யானை வெடி ஒன்றைக் கொளுத்திப் போடுவதற்குள் அது வெடிக்காது தன் பின்புறமாகத் தனது கொடுமையை அவனிடம் காட்டியது. ஆகவே அவனது உள்ளங்கை வெந்தது. இன்னொருவன் தீக்கொளுவிப் போட்ட குதிரை வெடி ஒன்று வெடிக்கவில்லை என்று

நினைத்துத் தனது கையில் எடுக்க, அது திடீர் என்று வெடித்து அவனது முகத்தை நாசப்படுத்தியது. இது போலவே வெடியால் வேடிக்கை பார்த்தவர்களில் சிலர் வேதனையும் அடைந்தார்கள்.

சங்கரனும் மணியும் வீடுவீடாக நுழைந்து இவற்றை எல்லாம் பார்த்துத் தாங்களும் களிப்படைந்தார்கள். அது சமயம் சங்கரனை நோக்கி மணி கூறுவானாயினன்,

**மணி :** ஐயோ! பாவம். பஞ்ச காலம் ஆயிற்றே. மழையும் மண்ணடித்ததே. "பணம் இல்லை, பணம் இல்லை" என்று கூறுகிறார்களே. ஆனால் கோடி வேட்டி கட்டி இருப்பதில் குறைவா? பலகாரத்தில் பாதகம் ஏற்பட்டதா? 'கடன் கொண்டாயினும் செய்வன செய்' என்று இத்தனையும் கடன் வாங்கிச் செய்கின்றனர்; பணத்தையும் பாழ் படுத்துகிறார்கள். காசைக் கரியாக்குகின்றார்கள். வேட்டிலே துட்டைப்போட்டு துகளாகப் புகைக்கின்றார்களே, அண்ணா!

**சங்கரன் :** அட தம்பி! மணி. அவ்வாறு எண்ணாதே. கைத்தொழிலைப் போற்ற வேண்டாமா? வெடியை வாங்குவார் இல்லை என்றால் இவ்விதமான பல வெடிகள் உண்டாகுமா? வெடிக்கும் தன்மையுள்ள உப்பு கரியோடு சேர்ந்து எத்தனை உருவங்கள் கொண்டு விளங்குகின்றது. இதனால் செல்வர்களது பணம் எத்தனை ஏழைத் தொழிலாளர்க்குச் செல்கின்றது.

**மணி :** நீ சொல்வதும் ஒருவிதத்தில் சரிதான். எதற்கும் ஓர் அளவு வேண்டும். மார்பை அரித்துக்

குலைத்து, நாளடைவில் இருமல் நோயை உண்டாக்கி, ஆயுளை அரித்துத் தின்று, இறுதியில் எமனிடம் சேர்க்கும். புகைப்பிடித்தலும் இதுபோன்றதல்லவா? பணத்தைப் பாழாக்கி வாயால் ஊதிப் புகைக்கின்ற கருவியும் கைத் தொழிலால் ஆனதே. அறிவுள்ளவன் செய்கின்ற செயலா அது?

இவ்வாறு உரையாடிக்கொண்டு செல்லும் பொழுது, "ஐயையோ, குழந்தை, குழந்தை" என்ற ஒரு பெருங் கூக்குரல் எழுந்தது. அக்குரல் எழுந்த வீட்டிற்குள் இருவரும் புகுந்தனர். மத்தாப்புக்குச்சியுடன், மகிழ்ந்த முகத்துடன் மூன்று வயது குழந்தை ஒன்று அவர்களின் கண்ணெதிரே காணப்பட்டது. தனதுகுழந்தையின் கோடி உடையில் தீப்பற்றியதைக்கண்ட அதன் தாயார் செய்வது ஒன்றுந்தெரியாது கூக்குரல் இட்ட வண்ணமாய் அதன் பக்கத்தில் நின்றுகொண்டு இருந்தாள். தனது உடையில் தனது உயிரைக் கொல்லுந் தீப் பற்றி இருப்பதை அக் குழந்தை தெரிந்துகொள்ளவில்லை. ஆகவேதான் அது மகிழ்ந்த முகத்துடன் காணப்பட்டது.

உள்ளே சென்ற சங்கரன் குழந்தையின் ஆபத்தான நிலைமையை அறிந்தான். தன் தம்பியாகிய மணியிடம் வைத்தியரை உடனே அழைத்து வரும்படிச் சொன்னான். மணியும் ஓட்டமாய் வைத்தியர் இருக்கும் இடம் நோக்கி ஓடினான். சங்கரனே அக்கம் பக்கம் பார்த்தான். பக்கத் தில் கிடந்த சாக்கை எடுத்து எரியும் பாகத்தில் வைத்து அணைத்தான். தீ மேற்கொண்டு எரிவதற்குக் காற்றில் லாது அவிந்தது. குழந்தையின் உயிர் தீக்கு இரையாகாது

தப்பியது. நல்வேளையாய்க் குழந்தையின் உடலையும் அது பாதிக்கவில்லை. வைத்தியரும் வந்தார். குழந்தை வைத்தியரிடத்தே ஒப்படைக்கப்பட்டது. சங்கரனும் வைத்தியரிடம் தனது வேலை முடிந்தது என்று கூறினான். குழந்தையின் தாயாரும் சங்கரனுக்குத் தன் மனம் உவந்த நன்றியறிதலைத் தெரிவித்தாள். சங்கரனும் மணியும் தம் வீடு நோக்கி நடக்கலானார்கள்.

[ வரும் வழியில் ]

**மணி** : ஏ, சங்கரண்ணா ! நான் போனபின் நீ என்ன செய்தாய் ?

**சங்கரன்** : பக்கத்தில் அரிசிச் சாக்கு ஒன்று கிடந்தது. அதை எடுத்து விரித்துக் குழந்தையைத் தீ எரிகிற பாகம் மேல் இருக்கும்படி படுக்கவைத்து எரிகிற பாகத்தில் வைத்தேன். இதெல்லாம் ஒரு விநாடிக்குள் செய்தேன். உடனே தீ அணைந்துவிட்டது. நீயும் வைத்தியரைக் கூட்டிக்கொண்டு வந்துவிட்டாய். உடனே குழந்தையை அவரிடம் ஒப்படைத்தேன். நான் செய்யவேண்டிய முதல் உதவி அத்துடன் தீர்ந்தது.

**மணி** : குழந்தையை ஏன் படுக்க வைத்தாய் ? சாக்குக் கொண்டு ஏன் மூடினாய் ? அந்த வீட்டில் தண்ணீர் இல்லையா ? தண்ணீர் விட்டு ஏன் தீயை அணைக்கவில்லை ?

**சங்கரன்** : அடுப்பில் எரிகிற தீ, வீட்டைப் பற்றி எரியும் தீ—இத் தீயைத் தண்ணீர்விட்டு அவித்து விடலாம். மக்களின் உடம்பிலுள்ள உடையைப் பற்றி எரிகிற தீ

மேல் தண்ணீர் விடுவாயேயானால் சுடப்பட்ட கத்தரிக் காய் குளிரத் தொடங்குகையில் பல வெடிப்புக்களை அடைவதுபோல் தீப்பட்ட இடம் தண்ணீரால் குளிரும் பொழுது பல வெடிப்புக்களை அடைய மரணம் உடனே நேரிடும். ஆகவே எந்த விதத்திலும் தண்ணீர் கொண்டு மக்களைப் பற்றி எரிகிற தீயை அணைத்தல் கூடாது.

தீ மேல்நோக்கியே எரியும் தன்மையது. ஆகையி னால்தான் குழந்தையைப் படுக்கும்படி செய்தேன். படுக் கும்படி செய்தலிலும் பற்றி எரிகிற பாகம் மேல் நோக்கிய வண்ணம் இருக்கும்படிச் செய்யவேண்டும். பெரியவர் களானால் அப்படியே தரையில் படுத்து உருண்டாலும் தீ அவிந்துவிடும். தீ எரிவதற்கு உயிர்வளி வேண்டும். உயிர்வளி இல்லாது இருந்தால் தீ நன்கு எரிவது இல்லை என்பதை நீ நன்கு காணலாம். தீ நன்கு எரிந்துகொண்டு இருக்கிற அடுப்பில் அதிகமாக விறகை அடுக்கிவிட்டால் அங்கு தீ நன்கு எரிவது இல்லை. ஏனென்றால் நல்ல காற்று அடுப்பில் எரிகிற தீக்கு உதவிசெய்ய முடியாது போகிறது. ஆகவேதான் அரிசிச் சாக்கை எரிகிற உடைமேல் போட் டேன். அவ்வாறு செய்ததால் வெளிக்காற்று உட்புகாத நிலையில் உடையில் பிடித்த தீ உடன் அவிந்தது.

**மணி:** சரி. அரிசிச் சாக்குக் கிடைக்கவில்லை. எல்லா இடங்களிலும் சாக்குக் கிடைக்குமா? கிடையாத காலத்து என் செய்ய வேண்டும்?

**சங்கரன்:** எல்லா வீடுகளிலும் சாதாரணமாய்ச் சாக்குத் துண்டு இருக்கத்தான் செய்யும். வெளியில் உள்ள மண் மக்களின் பாதங்களின் வழியாக வீட்டினுள் வராத

படி சாக்குத் துண்டையே பெரும்பாலும் முதல் வாசலின் முன் பக்கம் விரித்து வைத்து இருப்பார்கள். குழந்தையின் மூத்திரம் வீட்டில் பெருகித் தீ நாற்றம் கொடுக்காது இருக்கக் குழந்தைகளின் தொட்டிலின் கீழ்ச் சாக்குத் துண்டையே பரப்பி வைத்து இருப்பர். ஆகவே சாக்குத் துண்டு சாதாரணமாய் எல்லார் உடைய வீட்டிலும் இருக்கும் ஒரு பொருள் ஆகும்.

**மணி** : என்ன, அண்ணே! சாக்குத் துண்டைப் பற்றியே பெரிய சொற்பொழிவு செய்கிறாய். நாம்எடுத்துக் கொண்ட தலைப்புக்கு வா.

**சங்கரன்** : சாக்குத்துண்டு கிடைக்கவில்லையானால் அவ் வீட்டில் கிடைக்கிற தலையணை, பாய், சமுக்காளம், மெத்தை, போர்வை, கம்பளி, மெழுகுசேலை, மண், மணல் இவற்றுள் கையில் எது கிடைக்கிறதோ அதைக் கொண்டு தீயை அவிக்கவேண்டும். எரிகிற உடையின் மற்றைய பாகத்தை மடித்தும் தீயை அவிக்கலாம். கழற்ற முடியுமானால் எரிகிற உடையையே அவிழ்த்து வீசி விடலாம். கிழித்து எரியலாம். அந்த நேரத்தில் எது சுலபம் என்று தோன்றுகிறதோ அதையே காலத்தை நீட்டிக்காது உடன் செய்யவேண்டும்.

**மணி** : அதற்குப் பின் செய்யவேண்டியது யாது?

**சங்கரன்** : நெருப்பால் உடம்பு பாதிக்கப்பட்டிருக்கிறதா என்பதைப் பார்க்கவேண்டும். அதற்கு இடையில் அதிர்ச்சியைப் போக்க வேண்டும். பாதிக்கப்பட்ட புண்ணில் உடை ஒட்டிக்கொண்டு இருந்தால் அப்பாகத்

தைத் தவிர உடையின் மற்றையப் பாகத்தை கத்தறிக் கோலால் வெட்டி எடுக்க வேண்டும். எக்காரணங் கொண்டும் புண்ணின் மேல் ஒட்டிய ஆடையை உரித்து எடுத்தல் கூடாது.

தீயினுல் சுட்ட புண்ணோ, கொப்பளமோ இருந்தால் அவற்றை வைத்தியரின் உதவிகொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். இல்லையாளுல் கிருமி நுழைந்து இரத்தத்தைப் பாழ்படுத்தி, இரண சன்னியை உண்டாக்கி, மரணத்தை உறுதியாக அது கொடுக்கும்.

**மணி** : நெருப்பு இல்லாது கொதி நீர், சுடுஎண்ணெய் முதலியவைகளால் புண் உண்டாளுல் என்ன செய்ய வேண்டும் ?

**சங்கரன்** : கொதி நீர், சுடு எண்ணெய் முதலிய வற்ருல் புண் ஏற்படுமாளுல் கொதித்தநீரில் பிளாத்திரியை முக்கி எடுத்துப் புண்ணின்மேல் வைத்துப் பஞ்சுகொண்டு கட்டவேண்டும்.

**மணி** : திராவகத்தாலோ, காப்பியாலோ காயம் ஏற் பட்டால் செய்யவேண்டியது யாது ?

**சங்கரன்** : திராவகத்தாலோ, காப்பியாலோ காயம் உண்டாளுல் வெது வெதுப்பான நீரால் காயத்தைக் கழுவியபின் பிளாத்திரி போடவேண்டும்.

**மணி** : நீரில் மூழ்கி நினைவு தப்பியவர்களுக்கு உரிய முதல் உதவியை ஒன்று திரட்டி நேற்று நான் சொன்

னேன் அல்லவா? அது மாதிரி இன்று நெருப்புப்பற்றிய வர்க்கு உரிய முதல் உதவியை நான் சொல்லட்டுமா?

**சங்கரன் :** நேற்று நீ திறம்படக் கூறினாய். அழகாகக் கூறினாய். செய்தி ஒன்றும் விட்டு விடாது சொன்னாய். நீதானே நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். ஆகவே இன்னும் நீ விரும்பியவாறே சொல்லு. உதவி செய்ய வேண்டிய விடத்து உனக்கு நான் உதவி செய்கிறேன்.

**மணி :** தனியே ஒரு அறையில் ஒருவன் இருக்கின்றான். அவனது உடை நெருப்புப் பற்றியது. அந் நெருப்பை அவிக்க அவன் தண்ணீரை நாடுதல் கூடாது. அங்கும் இங்கும் ஓடுவதும் கூடாது. உடையின் மற்றைய பாகத்தால் நெருப்பை அவிக்கவேண்டும்.

நெருப்புப் பற்றியவர் நெருப்புப் பற்றிய பாகம் தரையில் படும்படி படுத்து உருண்டும் நெருப்பை அவிக்கலாம். நெருப்புப் பற்றிய உடையை அவிழ்த்து எறிந்தும், கிழித்து எறிந்தும் பிடித்த நெருப்பைப் போக்கலாம். சாக்கு, கம்பளி, போர்வை, மெழுகுசேலை, சமுக்காளம் இவற்றுள் எது கிடைத்தாலும் அதை நெருப்புப் பற்றிய இடத்தில் வைத்து நெருப்பிலிருந்து தப்பலாம்.

புண்ணினிடத்து உடை ஒட்டி இருந்தால் அப் பகுதி தவிர மற்றதைக் கத்தறித்து எடுக்கவேண்டும். எக்காரணம் கொண்டும் புண்ணில் ஒட்டிக்கொண்டு இருக்கிற உடையை உரித்து எடுத்தல் கூடாது.

திராவகம், சுடுஎண்ணெய் முதறியவற்றால் புண் ஏற்பட்டால் வெது வெதுப்பான நீரால் புண்ணைக் கழுவி பிளாத்திரி போட்டு பஞ்சுவைத்துக் கட்டவேண்டும்.

கொதிக்கும் பொருளை உண்டு தொண்டையில் புண் ஏற்பட்டால் நல்லெண்ணெயைச் சிறிது சிறிதாகக் குடிக்க வேண்டும். பனிக்கட்டியைச் சூம்பவேண்டும். கழுத்தைச் சுற்றி வெந்நீர் ஒத்தடம் போடவேண்டும்.

**சங்கரன் :** சரி, இதையும் நீ நன்கு புரிந்து கொண்டாய். என்றாலும் சிற்றூர்களில் என்ன செய்கிறார்கள் என் பதைக் கூறப்போகிறேன். நன்கு கவனி.

சேறு, தோசைமா, எழுதும்மை, தேன் முதலிய வற்றைத் தீயால் வெந்த புண்ணில் போடுகிறார்கள். அது தவறு. நல்ல வேளைக்கு அது சரியாய் விடுகிறது. இல்லை என்றால் அவ்வாறு அவர்கள் செய்கிற செய்கையே அவர் களது உயிரைக் கொல்ல யமனாக மாறுகிறது. ஆகவே அப்பேர்ப்பட்ட புண்ணை வைத்தியர் ஒருவரிடமே காண் பித்து அவர் சொல்லுகிறபடி நடந்து கொள்ளவேண்டும்.

---

## 4. திக்குமுக்காடலுக்கு உரிய முதல் உதவி

சங்கரனும் அவன் தம்பியாகிய மணியும் தங்களது விடுமுறை நாட்களைப் போக்க மதுரை சென்றனர். அங்கே அவர்களது அண்ணஞர் இருந்தார். ஆகவே இனி நடைபெறுகிற செய்தி மதுரையில் வைத்து நடைபெறுவதாகும்.

ஒரு நாள் மாலை சங்கரனும் மணியும் தனித்து மாடியில் இருந்து உரையாடத் தொடங்கிஞர்கள். இவர்களது உரையாடலைக்கேட்ட, இவர்களுடைய அண்ணஞர் மகளாகிய மங்கையர்க்கரசி என்ற ஆறு வயதுடைய பெண்குழந்தையும் கலந்து கொண்டாள்.

**சங்கரன் :** ஏ, மணி! நீ இதுவரை இருவகையான முதல் உதவியை அறிந்து கொண்டாய். இன்று திக்குமுக்காடலுக்கு உரிய முதல் உதவியை நான் உனக்குச் சொல்லப் போகிறேன். நீ நன்கு கவனி. மங்கையே! நீ சிறுபிள்ளை என்ருலும் சிறிது அறிவுடையவள். சேட்டை கீட்டை செய்யாமல் உனது சித்தப்பா சொல் வதைக்கேள்.

**மங்கை :** ஏ, சித்தப்பா! நீ சொல்லுகிறபடியே நடந்து கொள்கிறேன். திக்குமுக்காடல் என்று சொன்ஞயே! அப்படி என்ருல் என்ன ?

**சங்கரன் :** திக்குமுக்காடல் என்பது திணறல் ஆகும். சாதாரணமாக நாம் மூச்சு விடமுடியாமல்

தடங்கல் ஏற்படுகின்றதே அதுவே திக்குமுக்காடல் என்பதாகும்.

**மணி ;** அது எப்பொழுது வரும்?

**சங்கரன் :** தூக்கிட்டுக் கொண்டாலாவது, கெட்ட காற்று நிறைந்த இடத்து இருந்தாலாவது, அவசரமாக உணவு உண்டாலாவது, கவனக் குறைவால் சில சமயங்களில் உண்ணத்தகாத கட்டிப்பொருளை உண்டாலாவது திக்குமுக்காடல் ஏற்படலாம்.

**மணி :** சரி, அண்ணே! மேற்கூறிய காரணங்களால் ஏற்படுகிற திக்கு முக்காடலுக்கு முதன் முதல் நாம் செய்யவேண்டியது யாது?

**சங்கரன் :** தூக்கிட்டுக் கயிற்றில் தொங்குகிறவனை காலைப்பிடித்துக் கீழ் நோக்கி இழுத்துவிடக்கூடாது. இழுத்தால் கழுத்தில் இருக்கும் கண்ணி இறுகி மரணத்தைத் துரிதப்படுத்தும். ஆகவே அவனுடைய இடுப்பைப் பிடித்து மேலே தூக்கவேண்டும். கழுத்தில் இருக்கும் சுருக்கை முதலில் எடுத்து விட வேண்டும். பின் அடுத்தபடியாக அவனது உடைகளைத் தளர்த்த வேண்டும். இவ்வாறு செய்தும் மூச்சுவரவில்லையானால் 'உயிர் உற்பத்தி' செய்யவேண்டும். உயிர் உற்பத்தியை நீரில் மூழ்கி நினைவு இழந்தவனுக்குச் செய்யவேண்டும் என்று தெரிந்தோம் அல்லவா? அதையே இங்கும் செய்தல் வேண்டும். மறுமுறையாக அதை நினைவுப் படுத்துகிறேன்.

தூக்கிலிட்டுக் கொண்டவனை குப்புறப் படுக்க வைக்கவேண்டும். அவன் மார்பின் கீழ் ஒரு மடித்த

ஆடையை ஆதாரமாய் வைக்கவேண்டும். முகத்தைப் பக்கவாட்டமாய்த் திருப்பி வைக்கவேண்டும். அவனது விலாப் பக்கமாய்ச் சென்று முழங்கால் இட்டு இருந்து, விலாக்கஜளத் தாண்டி முதுகு எலும்பின் கடைசி வரிசைகளின் அடிப்பாகத்தில் இரு கைகளேயும் பரப்பவேண்டும். இம் முதுகு எலும்புகள் மார்பு எலும்பின் பின் பாகங்களே. கையை எடுத்துவிடாமல் படிப்படியாய் அழுத்திப் பின் படிப் படியாய் கனத்தைக் குறைக்கவேண்டும். தூக்கிலிட்டவன் மூச்சுவிடும் வரையில் இப்படியே செய்யவேண்டும். மூச்சுவிடத் தொடங்கியதும் சூடான பானம் கொடுத்துக் களேப்பைத் தீர்த்து, அதிர்ச்சியைப் போக்கக்கூடிய சில வார்த்தைகள் சொல்லவேண்டும்.

**மணி :** 'உயிர் உற்பத்தி' என்று இன்று நீ சொன்ன புதிய சொற்றொடருக்குப் பொருள் முதலில் எனக்குத் தெரியவில்லே. இதைத்தான் நீ சொல்லியபடி நான் முன்பே தெரிந்திருக்கின்றேனே.

**மங்கை :** ஏ! சித்தப்பா! நீ சொல்வது கதை சொல்வதுபோல் இருக்கிறது. சிறுமியாகிய எனக்கே நீ சொல்லுவது நன்கு தெரிகிறது. இன்னும் கேட்க வேண்டும் போல் இருக்கிறது. ஆகையினுல் கெட்ட காற்றினுல், புகையினுல் ஏற்படும் திக்கு முக்காடலே விவரித்துச் சொல்லு.

**சங்கரன் :** போர்க் காலங்களில் விடக்காற்று உண்டாகும். ஆலேகளில் நிலக்கரிக் காற்று ஏற்படும். பாழுங்கிணறு, சாக்கடைக்குழி முதலியவற்றிலும் உட்கொள்ள முடியாத கெட்ட காற்று ஏற்படும். இக்

காற்றிஞலும், விடக்காற்ருலும், அதிகப் புகையாலும் பீடிக்கப்பட்ட ஒருவன் மூச்சு விடமுடியாது திணறுவான். அவனது முகம் கருகி வாடிவிடும். மயக்கம் கூட அவனுக்கு ஏற்படும்.

உதவி செய்பவர் நீரில் நனைத்த துணியால் மூக்கு, வாய் முதலியவற்றைக் கட்டிக்கொண்டு, விடக்காற்றில் அகப்பட்ட ஒருவனை அவ்விடத்தில் இருந்து அகற்ற வேண்டும். நல்ல காற்ருேட்டம் உள்ள இடத்தில் அவனை வைத்தால் போதும்; திக்குமுக்காடல் அவனை விட்டுப்போம்.

ஈரத்துணியால் நமது மூக்கு, வாய் முதலிவற்றைக் கட்டிக்கொண்டு நல்ல காற்றை நிறைய உட்கொண்டு புகை சூழ்ந்த இடம் புகுந்து சன்னல் கதவுகளைத் திறப்ப தோடு அகப்பட்ட ஆளை அவ்விடத்தில் இருந்து அப்புறப் படுத்தி நல்ல காற்று உள்ள இடத்திற்குக் கொண்டு வர வேண்டும். அதுவே போதும்.

**மணி** : ஓலை வீடுகள் அக்காலத்தில் அதிகம் இருந்தன. பட்டணங்களிலும் இவை உண்டு. கிராமங்களில் இவ் வீடுகள் அதிகம் இருந்தன. ஓட்டுக் கடை முதலாளி களின் கருணையால் ஓலை வீடுகள் எல்லாம் ஓட்டடுக்கு வீடுகளாக மாறிவிட்டன.

**மங்கை** : ஏ, மணி சித்தப்பா! ஓட்டுக்கடை முதலாளிகள் ஏழை மக்களுக்கு ஓடுகளை இனுமாகக் கொடுத்து உதவி பண்ணிஞர்களா ?

**மணி**: இல்லை அம்மா, மங்கை, அவ்வாறு முதலாளிகள் ஏழைகளுக்கு உதவி செய்வார்களேயானல் விநோபாஜி

நிலக் கொடை இயக்கத்தில் ஈடுபட்டிருக்க மாட்டாரே. உதவி செய்ய வேண்டுமென்ற மனப்பான்மை மாறியதனுல் தான் மாரியானது ஒரு பக்கம் நன்கு பெய்து அப்பகுதியைக் கெடுக்கின்றது. மற்றெரு பக்கம் அது பெய்யாது அப் ப கு தி யை ப் பாழ்படுத்துகின்றது. வியாபாரிகளிடம் தந்திரம் அதிகங்காணும். இப்பொழுது நான் சொல்லப் போவதும் ஒரு தந்திரமே. வியாபாரத்தில் எப்பொழுதும் உட்கையாக ஒருவன் இருப்பான். அவனே தரகன். அத்தரகன் படுத்தும் பாடே வியாபாரிகளை எம்போன்ருர் குறை கூற நேரிடுகின்றது. ஊரில் தீ வைப்பதையே அவர்கள் ஒரு காலம் மேற்கொண்டிருந்தனர். அப்புண் ணியவான்களினுல் தான் ஓலை வீடுகள் எல்லாம் ஓட்டு வீடு களாக மாறிவிட்டன. புகையினுல் ஏற்படும் திக்குமுக்கா டலும் நாளடைவில் குறைந்துகொண்டே வருகின்றது.

**சங்கரன் :** நீ சிறுபிள்ளையாக இருந்தாலும் நான் கூட இதுவரைத்தெரிந்து கொள்ளாத மறைப் பொருள் ஒன்றை தெரிவித்தாய். மற்றையோர் பேசுவதை நீ நன்கு கேட் பாய் என்று தெரிகிறது. அவ்வாறு கேட்பதில் நல்லவை களை நன்கு கேள். கெட்டவைகளைக் கேளாதே. விட்டு விடு.

**மணி :** இந்த இடத்து ஒன்று சொல்ல நான் விரும்பு கிறேன். சொல்லட்டுமா, அண்ணு !

**சங்கரன் :** குறுக்கிடாதே, நான் சொல்லி முடித்த பின் நீ சொல்ல வேண்டியதைச் சொல்லு. எப்பொழுதும் ஒருவர் பேசுங்கால் மற்றெருவர் குறுக்கிடல் ஆகாது.

இருந்தாலும் இப்பொழுது நீ சொல்ல வேண்டியதைச் சொல்லு.

**மணி:** அணுக்குண்டைக் கண்டு பிடித்த பெரியார்கள் அதை ஆராய்ந்து பார்க்கும் பொருட்டு நமது நாட்டின், கீழ்ப் பக்கக் கடலிலே வீசி எறிந்தனர். அதில் இருந்து எழுந்த விடக்காற்று இன்றும் அக்கடலில் வாழும் உயிர் இனங்களைக் கொன்று விடுவதோடு தமிழ் நாட்டின் தென்பகுதியில் பருவ காலத்தையே மாற்றி விட்டது என்று கூறுகிறார்களே. நான்குநேரி சிறு வட்டத்தை நாளடைவில் பாலைவனமாக்கி விடுமோ வென்றும் பேசிக் கொள்கிறார்களே. அதன் உண்மை என்ன ?

**சங்கரன்:** நீ கேட்பது ஆராய்ச்சிக்கு உரியதாகும். அது வேறு செய்தியாகும். அதற்கும் இதற்கும் சம்பந்தம் இல்லை. அதை வேறு நேரத்தில் கேள். உனக்கு விளக்குகின்றேன். இப்பொழுது முதல் உதவி சம்பந்தமாய் ஏதாவது சந்தேகம் இருந்தால் கேள். பதில் சொல்லுகிறேன்.

**மங்கை:** ஏன், சித்தப்பா! திக்குமுக்காடல் வேறு எதனால் ஏற்படும் என்பதைக் கூறி அதற்கு உரிய முதல் உதவியையும் சொல்லு.

**சங்கரன்:** பெரிய பந்தல், கட்டிடம், சுவர் முதலியவை கீழே சில சமயம் விழுவது உண்டு. அவற்றின் அடியில் மக்கள் அகப்பட்டுத் திக்குமுக்காடல் ஏற்படுவது உண்டு. அவர்களுக்குக் காயம் ஏற்படாவிட்டாலும் மயக்கம் ஏற்படுவது உண்டு. அவர்களுக்கும் உயிர் உற்பத்தி செய்யவேண்டும். நல்ல காற்றில் அவர்களைக்

கிடத்தவேண்டும். சூடான பானம் அவர்களுக்குக் கொடுப்பதோடு அவர்களுக்கு ஏற்படும் அதிர்ச்சியையும் நீக்கவேண்டும்.

உணவை நிதானமாய் நன்கு மென்று தின்னுது சில சமயம் அவசர அவசரமாய் உண்ணுதலினுலும் திக்கு முக்காடல் ஏற்படும். புளியங்கொட்டை, பாக்கு, சோழி, கோலி, துட்டு முதலியவைகளைச் சிறுவர்கள் விழுங்கி விடுவார்கள். அப்பொழுதும் திக்குமுக்காடல் ஏற்படும். இக்காலங்களில் விழுங்கியவனுடைய தொண்டைவரை விரலை விட்டு வெளிச்சரக்கை வெளியே கொண்டுவர வேண்டும். இல்லையேல் அப்பொருளைக் குரல்வளைக் கப்பால் தொண்டைக்குள் போகும்படித் தள்ளவேண்டும். பின் அவனைக் குனியவைத்து அவனது முதுகில் தட்டு வாயேயானுல் அப்பொருள் வாயின் வழியே வெளிவந்து விடும். அவன் அதன் பிறகும் சரியாய் சுவாசம் விடா விட்டால் 'உயிர் உற்பத்தி' செய்யவேண்டும்.

ஏ, மங்கை! நான் சொன்னது தெரிந்ததா? மணிக்கு எல்லாம் தெரியும். இருந்தாலும் அவன் சேட்டைக்காரன் தான்.

**மணி :** இன்று கேட்டதைக் கூறுகிறேன். கேளுங் கள்.

தூக்கிட்டுத் தொங்குகிறவனைப் பிடித்துக் கீழ் நோக்கி இழுத்தல் கூடாது. அவனது இடுப்பைப் பிடித்து மேல் நோக்கித் தூக்கிப் பிடிக்கவேண்டும். கயிற்றைக் கத்தறித்து நீக்கவேண்டும். அவனது உடை களைத் தளர்த்தவேண்டும். உயிர் உற்பத்தி செய்ய

வேண்டும். சூடான பானம் கொடுக்க வேண்டும். அதிர்ச்சியைப் போக்கவேண்டும்.

விடவாயு, ஆலைகளில் உள்ள நிலக்கரி வாயு, பாழ்ங் கிணற்றிலுள்ள அசுத்தக் காற்று முதலியவைகளில் அகப்பட்டவர்களை நல்ல காற்று உள்ள இடத்திற்குக் கொண்டுவரவேண்டும். புகையில் அகப்பட்டவர்களைக் காப்பாற்ற முயலுகிறவன் தன்னை முதலில் காத்துக் கொள்ள வேண்டும். ஈரத்துணியால் மூக்கையும் வாயையும் சுற்றி அழுத்தமாய்க் கட்டிக் கொள்ள வேண்டும். சுத்தக் காற்றைத் தான் அதிகமாக எடுத்துக் கொள்ளவேண்டும். மூச்சை அடக்கி, புகை காணும் இடத்தில் புகுந்து சாளரங்களைத் திறக்க வேண்டும். புகையில் அகப்பட்ட ஆளை வெளியில் கொண்டு வந்து நல்ல காற்று அவன் மேல் வீசும்படிச் செய்யவேண்டும். உயிர் உற்பத்தி செய்யவேண்டியது இருந்தால் அதையும் செய்ய வேண்டும். களைப்பை நீக்க வேண்டும். அதிர்ச்சியைப் போக்கவேண்டும்.

பந்தல், கட்டிடம், சுவர் வீழ்ந்து உள்ளே புதையுண்டவர்கள் காயம் அடையாவிட்டாலும் மயக்கம் கொள்ளுவர். அவர்களுக்கும் மேற்கூறியவாறு உயிர் உற்பத்தி செய்தல், களைப்பைப் போக்குதல், அதிர்ச்சி நீக்குதல் முதலியவற்றைச் செய்தல் வேண்டும்.

விரைந்து உணவை உண்ட காலத்தும், கவனக் குறைவால் காசு, பருங்கல் முதலியவற்றை விழுங்கி விடுவதாலும் திக்குமுக்காடல் ஏற்படும். வெளிச்சரக்கை

வெளியில் கொண்டுவருவதற்கு அவனுடைய வாயில் விரலை விட்டு எடுக்க வேண்டும். முடியாவிட்டால் விரலால் அப்பொருளைத் தொண்டையில் குரல் வளைக்கு அப்பால் செல்லும்படி அப்பொருளைத் தள்ளிவிட வேண்டும். பிறகு அவனைக் குனியும்படிச் செய்து முதுகில் தட்டிக் கொடுக்கவேண்டும். அப்பொழுது அப்பொருளை அவன் கக்கி விடுவான். சுவாசம் சரியாய் இல்லாவிட்டால் உயிர் உற்பத்தி செய்யவேண்டும்.

வைத்தியர் வந்ததும் நோயாளியை அவரிடம் சேர்க்க வேண்டும்.

---

## 5. எலும்பு உடைந்ததற்குச் செய்ய வேண்டிய முதல் உதவி

சில நாட்கள் கழிந்தன. ஒரு நாள் மாலை மேற்கூறிய மூவரும் சந்தித்தனர்.

**சங்கரன் :** மங்கையர்க்கரசியே! மணியே! இன்று உங்களுக்கு முக்கியமான முதல் உதவி ஒன்றைக் கூறப் போகின்றேன். கேளுங்கள். ஏ, மங்கை! உனது சித்தப்பா மணியின் கைகள் எவ்வாறு இருக்கின்றன, சொல்? பார்ப்போம்.

**மங்கை :** சித்தப்பா மணியின் இடக் கை என் கை போல்தான் இருக்கிறது. ஆனால் வலக் கை டானைவைப் போன்று இருக்கின்றது.

**சங்கரன் :** அவனது வலக்கை டானைவைப் போன்று ஏன் இருக்கின்றது? பிறவியிலேயே அவ்வாறு இருக்கின்றதா? அல்லது இடையில்தான் அவ்வாறு ஏற்பட்டதா ?

**மங்கை :** பிறவியில் அவ்வாறு இல்லை. அவனது வலக் கை நான் அறிய நம் கைபோன்றுதான் இருந்தது. போன ஆண்டு மார்ச்சு மாதம் பதினைரும்நாள் வெள்ளிக் கிழமைதான் அவ்வாறான நிலையை அவன்கை அடைந்தது. ஆகவே அது இடையில் ஏற்பட்டதுதான்.

**சங்கரன் :** அது எவ்வாறு ஏற்பட்டது என்று உன்னால் சொல்ல முடியுமா? உனக்குத் தெரிந்ததைச் சொல் பார்ப்போம்.

**மங்கை :** 1956ஆம் வருடம் மார்ச்சு மாதம் பதினறும் நாளை நான் ஒரு நாளும் மறக்கமாட்டேன். எனது அப்பா மாமா முதலியோர் அலுவலகம் சென்று இருந்தனர். அதற்குமுன் கொஞ்சநாளாகவே எனது மணி சித்தப்பா சேட்டைப் பண்ணிக்கொண்டு வந்தான். ஒருவருக்கும் தெரியாது ஊர் ஊராய் ஓடினன். புகைவண்டியில்கூட சீட்டு இல்லாது பல ஊர்கள் சுற்றினன். படிப்பைப் பாழ் படுத்தினன். எங்காவது அவனுக்கு ஆபத்து ஏற்படலாம் என்று யாவரும் எண்ணினேம். அவன் கதை சொன்னல் விரியும். சுருக்கமாகக் கூறினல் நம்மை அடிமைப்படுத்தி ஆண்ட ஆங்கிலேயரின் முதல் தலைவனுகிய கிளைவின் இளமைப் பருவத்தை ஒத்து இவனது இளமைப்பருவமும் விளங்கிற்று.

இப்பொழுது அவன் நல்ல பிள்ளைபோல் இருக் கின்ருன். எதில் இருந்து தெரியுமா? சென்ற மார்ச்சு மாதத்தில் இருந்து. அன்று ஒரு நாள் அவன் இரு சக்கர வண்டியில் ஏறி மாவட்டத் தலைவர் இருக்கும் அலுவல கத்தின் ஓர் பக்கம் இருக்கும் அஞ்சல் அலுவல் அகம் சென்று வீடு திரும்பினன். வருகிற வழியில் மதிச்சிய மும் செனய்நகரும் ஒன்ருய்ச் சேருகிற சாலையின் மத்தி யில் மணல் ஏற்றிச் செல்லும் நெய்யாவி வண்டியில் அகப் பட்டு அபாயத்திற்கு உள்ளானன். இதுவே கெட்ட பிள்ளைகளின் கதி ஆகும். அபாயத்தில் அ க ப் ப ட் ட மணியின் வலக்கை எலும்பு முறிபட்டு இரத்தப் பெருக்கு எடுத்து ஓடியது. அரசாங்கத்தாரின் வைத்திய சாலை யில் மூன்று மாதங்கள் வைக்கப்பட்டான். அங்குள்ளார் யாவரும் நன்கு கவனித்தனர். அப்படி இருந்தும் அவனது கை இவ்வாறு இருக்கிறது.

**சங்கரன் :** நீ சிறு பிள்ளையாக இருந்தாலும் அவன் செய்த செய்கையைச் சித்திரம் போல் வரைந்து காட்டினுய். மணி விழுந்தமாத்திரத்து அவனை ஒருவரும் தொடவில்லை. அவன் உடனே வைத்திய நிலையத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டான். பெரிய வைத்தியராகிய அண்ணுமலையார், சின்ன வைத்தியராகிய சாம்பசிவனுர் போன்றவர்களும் துரைசாமி, ஞானம், சக்திவேல், மாணிக்கம் முதலியபேர்களும் நன்ருக, அன்பாகப் பார்த்தார்கள். பார்த்தும் அவனது கை இன்னும் டாருவைப்போல்தான் இருக்கிறது. ஆகையினுல் எலும்பு உடைவில் முதல் உதவி செய்பவர் மிகமிகக் கவனமாய் செய்ய வேண்டும் என்பது தெரிகின்றது.

**மணி :-** நீங்கள் பேசியது எல்லாம் உண்மைதான். நான் எனது அப்பா, அம்மை முதலியவர்கட்கும், என்னை வளர்க்கும் அண்ணன், அண்ணிக்கும் எவ்வளவோ தொந்தரவு கொடுத்தேன். வீணுன மனக்கவலையும் அவர்களுக்குக் கொடுத்தேன். அவை தப்பிதம் என்று இப்பொழுதுதான் உணருகிறேன். இனிமேல் அவ்வாறு நான் நடக்க மாட்டேன். எலும்பு முறிவுக்கு உரிய முதல் உதவியை நீ எங்களுக்குச் சொல்லு.

**சங்கரன் :-** எந்த விதமான அபாயம் ஏற்பட்டாலும் முதலில் வைத்தியருக்கு அவசியம் அறிவிக்கவேண்டும். நோயாளியின் அதிர்ச்சியைப் போக்கவேண்டும்.

நீரில் மூழ்கி நினைவு தவறியவர், நெருப்புப் பட்டவர், திக்குமுக்குக் கொள்வர் - இவர்களுக்கு நாம் செய்த முதல் உதவியிலேயே, வைத்தியரின் உதவி இல்லாதே பயன்

ஏற்பட்டது கண்டோம். ஆனால் எலும்பு உடைப்பில் அவசியம் வைத்தியரின் உதவி வேண்டும். முதல் உதவியும் வேண்டும். இதற்கு இவ்விரு உதவியும் வேண்டும்.

**மங்கை :–** சித்தப்பா ! இந்த எலும்பு உடைப்பு சர்வ சாதாரணமாக நடைபெறுகிறது. கல் தட்டிக் கீழே விழுந்தால் எலும்பு உடைப்பு. கதவில் ஏறிக் கீழே விழுந்தால் எலும்பு உடைப்பு. மாடிப் படியில் தடுமாறினால் எலும்பு உடைப்பு. தண்ணீர் உள்ள சிமெண்டுத் தரையில் வழுக்கி விழுந்தால் எலும்பு உடைப்பு. விளையாட்டிலுங்கூட எலும்பு உடைப்பு. எலும்பு உடைப்பு எங்கும் காண்கின்றது.

சடுகுடு, பந்தாட்டம், உயரம் தாவுதல், நீளம் குதித்தல் முதலிய ஆட்டங்களில் அடிக்கடி இது ஏற்படுகிறது. இதற்குரிய முதல் உதவியை ஒவ்வொருவரும் தெரிய வேண்டியது அவசியமே. நீதான் வாயாடி என்று நினைத்தேன். நானும் ஒரு வாயாடி ஆக மாறி வருகிறேன் என்பதை இப்பொழுது உணருகிறேன். சொல்ல வேண்டியதைச் சொல்லித்தானே ஆகவேண்டும். உனது வாயைச் சிறிது திற.

**சங்கரன் :-** மங்கை சொல்லிய பல காரணங்களால் எலும்பு உடைவது உண்டு. எலும்பு உடைந்த இடத்தில் வீக்கம், வலி, பளபளப்பு ஏற்படும். உடைந்த எலும்பை ஒன்று சேர்க்க நமக்குத் தெரியாது. ஆகவே காயம் பட்ட இடத்தை நாம் ஒன்றுமே செய்யக்கூடாது, ஏனென்றால் எலும்பின் உடைந்த நுனிகள் உள் இருக்கின்ற தசை நார்களைக் குத்தி மென் மேலும் கிழித்து விடும்.

ஆகவே எலும்பு உடைந்த இடம் மயிரளவுகூட அசை யாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். வைத்தியர் வந்ததும் நோயாளியை அவரிடம் ஒப்படைக்க வேண்டும்.

நோயாளியை வைத்தியசாலைக்கு எடுத்துச் செல்ல நேரிட்டால் எலும்பு முறிந்த இடத்தை மூங்கில் கழிகளைக் கொண்டு கட்டிய தட்டிலோ, கட்டிலிலோ அவனை எடுத் துப் படுக்கவைத்துத் தூக்கிச் செல்லவேண்டும். உடனே அவனை வைத்தியரிடம் ஒப்படைக்கவேண்டும்.

**மணி** :— எலும்பு உடைந்த இடம் மயிர் அளவு கூட அசையாமல் இருக்க வேண்டும் என்று சொன்னாயே அதைக் கொஞ்சம் விளக்கமாகச் சொல்.

**சங்கரன்** :— கழி, அட்டை, மடித்த காகிதம் முதலிய வற்றில் எது கிடைத்தாலும் அதைக்கொண்டு நொறுங் கின எலும்பின் மேல் இரண்டு பக்கமும் அவனுக்கு வலி இல்லாத முறையில் நீள வாட்டத்தில் அமைத்து, துணி, கயிறு முதலியவற்றில் கிடைத்ததைக் கொண்டு கட்ட வேண்டும். இவ்வாறு செய்தால் நொறுங்கிய எலும்பு கள் மயிர் அளவுகூட அசையாது ஆகிவிடும். இவ்வாறு செய்வதால் எலும்பின் உடைந்த நுனிகள் உள்ளே காயப்படுத்தா.

**மணி** :— முகவாய்க் கட்டையில் எலும்பு உடைவு ஏற்பட்டால் என் செய்வது? இவ்வாறு கழிகளால் கட்ட முடியாதே?

**சங்கரன்** :- சந்தர்ப்பத்திற்குத் தக்கவாறு சாமர்த்திய மாக நடந்து கொண்டால்தான் முதல் உதவி செய்ய முடியும்.

முகவாய்க் கட்டையில் எலும்பு முறிந்தால் கழிகளைக் கொண்டு கட்ட முடியாது. அவ்விடங்களில் துணியை அகல வாட்டமாயும், நீள வாட்டமாயும் கட்டி இரு துணிகளையும் முடிச்சுப்போட்டு உடைந்த எலும்பை அசையாமல் இருக்கச் செய்து விடலாம்.

கை, மார்பு, தோள் முதலிய இடங்களில் எலும்பு முறிவு ஏற்படும். உடம்பின் மற்றைய அங்கம் அசைந் தால் கையும் அசையும். ஆகையால் தோளில் எலும்பு முறிவு ஏற்பட்டால் கையசையாது இருக்க வேண்டும். கழுத்தைச் சுற்றிலும் தொங்க விட்டு இருக்கும் துணி தாங்கும்படி அதில் கையை வைத்து இருக்க வேண்டும்,

**மணி** :— மார்பு, எலும்பு முறிந்தால் செய்ய வேண்டியது யாது?

**சங்கரன்** :— மார்பு எலும்பு முறிந்தால், அவன் இரத் தம் கக்காமல் இருந்தால், முறிந்த இடத்தில் துண்டால் சுற்றிக் கட்டவேண்டும். பின் அதன் கீழ்த் தொடங்கி முன்னதின் மேலேயே ஒரு நீளத் துணியால் கட்ட வேண்டும். நொறுங்கின எலும்புக்குப் பக்கத்தில் உள்ள கையைக் கழுத்தில் இருந்து தொங்க விட்ட துணித் தொட்டிலிலே போடவேண்டும். எலும்பு உடைந்தவனு டைய உடம்பில் கோட்டு, சட்டை முதலிய மேல் அணி கள் இருந்தால் கவனமாகக் கிழித்து எடுக்க வேண்டும். எலும்பு முறிந்தவனை நிரம்பக் கவனமாக, நொறுங்கிய பக்கமாகப் புரட்ட வேண்டும். தலையணை ஒன்றையும் அப்பக்கத்தின் அடியில் ஆதாரவாக வைக்கவேண்டும்.

இரத்தம் கக்கினால் மார்பில் கட்டுப் போடக்கூடாது. வைத்தியரிடம் நோயாளியை உடனே ஒப்படைத்தல் வேண்டும்.

**மணி :** இடுப்பு எலும்பு முறிந்துவிட்டால் செய்ய வேண்டிய முதல் உதவி இன்னது என்பதைத் தெளிவாய்ச் சொல்லு.

**சங்கரன் :** இடுப்பு எலும்பு ஒருவனுக்கு முறிந்து விட்டால் அதைச் சுற்றி அழுத்தமாக ஒரு துணியைக் கட்ட வேண்டும். இரண்டு முன்னங்கால்களையும் ஒன்று சேர்த்துக் கட்ட வேண்டும். அவனைக் கழிகளால் ஆகிய ஏணிபோல் இருக்கிற கருவியில் எடுத்துச் செல்ல வேண்டும்.

உடலின் எந்தப்பாகத்தில் எந்தப் பகுதி உடைந்தாலும் உடைந்த பாகம் எள் அளவும் அசையாதுஇருக்க வேண்டும். துணியையோ கழியையோ கொண்டு கட்ட வேண்டும். அதனுடன் தொடர்பு உடைய மற்றஉறுப்புக்களையும் அசையாது இருக்கும்படி செய்யவேண்டும்.

எலும்பு உடைப்பைச் சரிப்படுத்துவது வைத்தியர் ஒருவரால்தான் முடியும். ஆகவே எலும்பு உடைப்பு உடைய ஒருவனை வைத்தியரிடமேதான் சேர்க்க வேண்டும்.

அது இல்லாது எண்ணெய் தேய்த்தல், உருவி விடல் தடவி விடல் முதலியன கூடா. ஆகவே ஏ, மணி, ஏ மங்கை, நீங்கள் இருவரும் எலும்பைச் சரிப்படுத்த முயலாதீர்கள். முயன்றால் உங்களது முயற்சி விபத்தில்

முடியும். சீக்கிரமே அவன் மரணம் அடைய நேரிடும். உதவி செய்யப்போய் உபத்திரவம் செய்தவர்கள் ஆவீர்கள்.

**மணி :** எலும்பு உடைதலுக்கு உரிய முதல் உதவியைச் சேர்த்துச் சொல்லுகிறேன். நீங்கள் இருவரும் கேளுங்கள்:

ஒரு ஆபத்தில் எலும்பு உடைந்து விட்டால் அந்த இடத்தில் வீக்கம், வலி, பளபளப்பு உண்டாகும். வைத்தியருக்கு உடனே சொல்லிவிடவேண்டும். நம்மால் செய்யக் கூடிய முதல் உதவியைச் செய்யவேண்டும். எலும்பு உடைந்த பாகத்தை ஒன்றுய்ச் சேர்க்க முயற்சி செய்யக் கூடாது. காயம் அடைந்த பாகத்தைத் தொடவும்கூடாது. அப்படிச் செய்தால் எலும்பின் உடைந்த நுனிகள் உள்ளே சதை நார்களை மேன்மேலும் கிழித்து விடும். ஆகவே எலும்பு உடைந்த இடம் மயிர் அளவுகூட அசையாமல் இருக்கும்படி பார்த்துக் கொள்ளவேண்டும். எலும்பு உடைந்தவனை மருத்துவக் கூடத்திற்கு நாமே எடுத்துச் செல்ல நேரிட்டால் மூங்கில் கழிகளை ஏணி போன்று குறுக்கும் நெடுக்குமாகக் கட்டிய தட்டிலாவது கட்டிலிலாவது அவனைத் தூக்கிச் செல்லவேண்டும்.

எலும்பு உடைந்த இடம் எக்காரணங்கொண்டும் மயிர் அளவுகூட அசைதல் கூடாது. கழி, அட்டை, மடித்த காகிதம் முதலியவற்றில் கிடைத்தது கொண்டு உடைந்த எலும்பின்மேல் இரண்டு பக்கமும் நீள வாட்டத்தில் வைத்து, துணி கயிறு போன்றவைகளால் அழுத்திக் கட்டவேண்டும். பிறகு பஞ்சு, பழைய துணி முதலியவற்றுல் அக்கட்டைப் பொதிய வேண்டும்.





கட்டும்—துணித் தொட்டிலும்

இவ்வாறு செய்தால் உடைந்த எலும்பு அசையாது இருக்கும். அதனால் எலும்பின் நுனி உள்ளே புதியதான ஒரு புண்ணை உண்டாக்காது.

உடம்பில் எந்த இடத்தில் கழிகளை வைத்துக் கட்ட முடியவில்லையோ அவ்விடத்தில் துணியை அகல வாட்டமாயும் நீளவாட்டமாயும் கட்டி இரு துணிகளையும் முடிச்சுப் போடவேண்டும். உடைந்த எலும்பு அப்பொழுது அசையாது இருக்கும். கை, மார்பு, தோள் முதலியவைகள் மற்றை உறுப்புக்கள் அசைந்தால் தாமும் அசையும் ஆகையால் தோளில் எலும்பு உடைந்தால் கையையும் அசையாது இருக்கும்படிச் செய்யவேண்டும். கழுத்தைச் சுற்றித் தொங்கவிட்டிருக்கும் ஒரு துணியில் கையைத் தாங்கும்படி செய்யவேண்டும்.

மார்பு எலும்பு உடைந்தால் அதைச்சுற்றி ஒரு துண்டு கொண்டு கட்டவேண்டும். அதற்குக் கீழ் இருந்து தொடங்கி முன்னதன் மேலேயே இன்னும் ஒரு துண்டைக் கட்டவேண்டும். நொறுங்கின எலும்புக்குப் பக்கம் உள்ள கையைக் கழுத்தைச் சுற்றித் தொங்கவிட்டு இருக்கும் ஒரு துணியில் தாங்கும்படிச் செய்யவேண்டும். வாயில் இருந்து இரத்தம் வந்தால் மார்பில் துணி கட்டுதல் கூடாது. கையைமட்டும் தாங்கும்படிச் செய்யவேண்டும். உடலில் அணிந்து இருக்கும் ஆடைகளைக் கிழித்து எடுக்கவேண்டும். எலும்பு உடைபட்ட பக்கமாக எலும்பு உடைந்தவனைப் புரட்டி அதன் அடியில் ஒரு தலையணையை வைக்கவேண்டும்.

இடுப்பு எலும்பு நொறுங்கினல் அதைச்சுற்றி அழுத்தமாகத் துணியால் கட்டவேண்டும். இரண்டு முன்னங்கால்களையும் சேர்த்துக் கட்டவேண்டும். எலும்பு உடைந்தவனைக் கழிக்கட்டில், சாதாரணக் கட்டில் இவை களில் எடுத்துக்கொண்டு மருத்துவக் கூட்டம் சேர்க்க வேண்டும்.

எந்த எலும்பு உடைந்தாலும் அவ்விடம் அசையாமல் இருக்கத் துணியையோ, கழியையோ கொண்டு கட்ட வேண்டும். அதனுடன் தொடர்பு கொண்ட உறுப்புக் களையும் அசையாமல் இருக்கும்படி செய்யவேண்டும். எண்ணெய் போட்டுத் தேய்ப்பதும், உருவிவிடுவதும், தடவி விடுவதும் ஆபத்தையே விளைவிக்கும். எக்காரணங் கொண்டும் எலும்பைச் சரிப்படுத்த நாம் முயற்சித்தல் கூடாது. வைத்தியர் ஒருவரே எலும்பைச் சரிப்படுத்தக் கூடும். ஆகவே எலும்பு உடைந்தவனைத் தக்க வைத்தியர் இடமே சேர்க்கவேண்டும்.

---

## 6. இரத்தம் கொட்டுதலுக்கு உரிய முதல் உதவி

---

**சங்கரன் :** ஏ, மங்கை! உனது மணி சித்தப்பா எங்கே?

**மங்கை :** தெரியாதா? அவன் எங்கு இருப்பான் என்று. விடிந்துவிட்டதல்லவா? இப்பொழுது பள்ளிக் கூடமோ அவன் போகவேண்டாம். வானொலி வைத்து இருக்கும் பக்கத்து வீட்டில் இருப்பான். பைத்தியக்காரன் தெருவில் வந்து இருந்தால், அங்குக் கூடிஇருக்கும் பிள்ளைகளில் தானும் ஒருவனாக நிற்பான். பிச்சைஎடுத்து வரும் பண்டாரம், பரதேசி பாடும் பாட்டைக் கேட்டுக் கொண்டே வீடு வீடாகப் போவான். தெருவில் பரதேசி பாடுகிற சத்தமும் கேட்கிறது அல்லவா? போய் அவனைப் பார்த்து வரட்டுமா? அதோ மணியும் வந்துவிட்டானே.

**சங்கரன் :** நீ அவனைத் தேடிப் பார்ப்பது சரி. அவனைத் தேடப்போய் நீ ஆபத்தில் சிக்கிக்கொள்ளக் கூடாது. மதுரையைப் பற்றிச் சொல்ல வேண்டியது இல்லை. பலவிதமான வாகனங்கள் அங்கும் இங்கும் அடிக்கடி ஓடும். அவற்றை ஓட்டுபவர்களோ கொஞ்சமும் பொறுப்பற்றவர்கள். ஒருவனது உயிரைக்கொன்றால் கொன்றவனுக்கு மரணதண்டனை என்ற சட்டத்தை இவர்களுக்கும் கொடுத்தாலல்லது வாகனத்தால் ஏற்படும் அபாயத்தை நாம் குறைக்க முடியாது. புகைவண்டி, நெய்யாவி வண்டி முதலியவற்றை ஓட்டுகிறவர்களுக்கு கடுந்தண்டனை விசாரணை இன்றியே கொடுக்கவேண்டும். ஏனென்றால் எத்தனை உயிர்கள் ஓட்டுபவரின் கையில்

இருக்கின்றன. ஒரு உயிரையாவது அவர்கள் படைக்க முடியுமா? எத்தனை உயிர்களையோ ஒரு விநாடியில் அவர்கள் போக்கி விடுகிறார்கள். அரியலூர் விபத்துப்போன்று எத்தனை விபத்துக்கள் நடக்கின்றன.

**மணி :** அன்று நான் வரும்பொழுது நெய்யாவி வண்டி ஓட்டியவன் சத்தங் கொடுத்திருந்தால் நான் அகப்பட்டு இருப்பேனா ?

**மங்கை :** சரி. சாலையின் சட்டம் தெரிந்து போனால் ஆபத்தைக் குறைக்கலாம். அரசாங்கத்தினர் எத்தனையோ நடவடிக்கை எடுத்தும் ஒவ்வொருநாளும் வாகனங்களால் ஏற்படும் அபாயம் அதிகரித்துக்கொண்டுதான் இருக்கிறது. அரியலூர் ஆபத்து ஏற்பட்டது. விசாரணையும் நடந்தது. ஆனால் என்ன பயன்? கண்காணிப்போர் தம் கடமையை எங்குச் செய்கின்றனர்? கடமை செய்யாதவருக்குக் கடுந் தண்டனை விதித்தால் இவ்வாறு ஏற்படுமா ? விசாரணை நடந்துகொண்டு இருக்கும் இடத்திலேயே சாமான் வண்டிகள் தடம்புரண்டன என்ற செய்தியை நாளிதழ் தரவில்லையா ?

**மணி :** சரி சங்கர அண்ணனே! இரத்தம் கொட்டுதலுக்கு உரிய முதல் உதவியைப் பற்றிச் சொல்லு.

**சங்கரன் :** நீ உனது கை எலும்பை உடைத்துக் கொண்ட அன்று வைத்தியர்கள் உன்னைப்பற்றி அதிகம் கவலை அடைந்தனர். அன்று இரவு ஒரு மணிக்கு மேல் நீ உயிருடன் இருக்க மாட்டாய் என்றனர். ஏன் தெரியுமா? உனது உடம்பில் உள்ள இரத்தம் எல்லாம் வெளி ஏறி விட்டது. அதுகாரணமாகவே அவர்கள் உன்னை நம்ப

வில்லை. நீ மருத்துவக்கூட்டத்தில் இருக்கும்வரை ஐம்பது அவுண்சு இரத்தத்திற்கு அதிகம் உன் உடலில் செலுத்தினர். இம்மதுரை அரசினர் மருத்துவக் கூடத்தில் வேலை பார்க்கும் அனைவரின் அன்பாலும் இன்று நீ உயிருடன் இருக்கின்றாய். விரிக்கிற் பெருகும். இரத்தங் கொட்டினால் அதற்கு உடன் நாம் செய்யவேண்டிய முதல் உதவி பற்றி இன்று உங்கட்குச் சொல்லப் போகின்றேன். நன்கு கவனியுங்கள்.

மூன்றுவகையான இரத்தம் நம் உடம்பில் இருக்கிறது. இருதயத்தில் இருந்து இரத்தம் தாதுக்கள் வழியாக தேகம் எங்கும் பாய்கிறது. அவ்விரத்தம் சுத்தமாயும் மிக மிகச் சிவப்பாயும் இருக்கும். அது குபுக்கு குபுக்கு என்று பீச்சாங்குழல் தன்னிடம் உள்ள தண்ணீரைப் பீச்சுவது போலப் பீச்சும். இவ்வாறு சிறிது நேரம் இரத்தம் வரும்படி விட்டு விட்டால் மரணம் ஏற்படுவது உறுதியாகும்.

அடுத்தபடியாய் நாளம் என்ற இரத்தக் குழாய்களின் வழியாக உடம்பில் உள்ள இரத்தம் இருதயத்திற்குத் திரும்பச் செல்லும் இரத்தம் உண்டு. அது உடம்பில் உள்ள அசுத்தத்தை எடுத்து இருதயத்தில் சுத்தி செய்வதால் அவ்விரத்தம் கருப்புக் கலந்த சிகப்பாய் இருக்கும். இது இடைவிடாத நீர் ஒழுக்குப் போன்று நிதானமாய்வரும். இதையும் நிறுத்தாது விட்டாலும் மரணம் ஏற்படும்.

அதற்கு அடுத்தபடியாகத் தந்துகக் குழல் என்ற மயிரைப்போல் இருக்கிற இரத்தக் குழாய்கள் இருக்கின்றன. இவைகளில் இரத்தம் கசியும். நமக்கு ஏற்படும் காயங்கள் பல இவ்வகையைச் சார்ந்தனவேயாம்.

**மங்கை :** எனது மணிச்சித்தப்பாவிற்கு ஏற்பட்ட காயம் மேற்கூறிய மூன்றிலுந்தான். மரணம் பற்றி ஏன் வைத்தியர்கள் சிந்தனை செய்யமாட்டார்கள்?

**சங்கரன் :** அவ்வேளையில், மங்கையே! உனது அப்பா துடித்த துடியும், கொண்ட வருத்தமும் அளவில் அடங்கா. இனிமேல் நான் சொல்லப்போவது அவைகளுக்கு உரிய முதல் உதவி ஆகும். இரத்தம் கொட்டுதலுக்கு வைத்தியரின் உதவியே தேவை. வைத்தியர் இல்லாது இக்காயத்தை நம்மால் குணப்படுத்த முடியாது. என்றாலும் அவர் வரும்வரை அபாயத்தில் அகப்பட்ட ஆளை உயிருடன் வைத்திருக்கவேண்டும் அல்லவா?

இரத்தம் காயத்தின்மேல்தான் உறையும். பிசின் போன்ற ஓர் பொருள் தோன்றும். அதை நாம் ஒன்றுஞ் செய்யக்கூடாது. அதற்குமுன் காயத்தின் மேல் கட்டை விரலால் அழுத்தவேண்டும். காயம்பட்ட இடத்தை உயரமாகத் தூக்கி வைக்கவேண்டும். காயங்கொண்டவனுடைய உடையைத் தளர்த்தவேண்டும். குளிர்நீர் அல்லது உருகிய பனிக்கட்டியைக் காயத்தில் வைக்கவேண்டும். ஓடிவருகிற இரத்தம் ஒருவாறு தடைப்படும்.

நாதில் இருந்து இரத்தம் பீறிட்டால் காயத்திற்கும் இருதயத்திற்கும் மத்தியில் காயத்தின் அருகில் துணியால் இறுகக் கட்டவேண்டும். இதனால் இரத்தஓட்டம் தடைபடும்.

தலைக்காயத்திற்குக் கழுத்திலுள்ள நாடிகளை இறுக அழுத்த வேண்டும். முகக் காயத்திற்கு முகவாய்க்

கட்டையிலுள்ள நாடிகளை அழுத்தினால் இரத்தங் கொட்டுதல் தடைபடும்.

சில சமயம் விழுந்த பல்லில் இருந்தும், உதட்டில் இருந்தும் இரத்தங் கொட்டும். பல் ஆனால் படிகாரம் கரைத்த குளிர் நீரால் வாயைக் கொப்பளிக்கவேண்டும். பல் விழுந்த இடத்தில் சிறிய பஞ்சை வைத்து. அழுத்திப் பிடிக்கவேண்டும். உதடு ஆயின் ஒரு விரலை உதட்டிற்கு உள்ளேயும் மற்று ஒரு விரலை உதட்டிற்கு வெளியேயும் வைத்து அழுத்த வேண்டும்.

**மங்கை :** பல்லிலும் உதட்டிலும் இரத்தம் கொட்டுதலை என்போன்றவர் நன்கு தெரிதல் வேண்டும். சிறுவர் சிறுமிகள் ஓடும்பொழுதும், கைவண்டி ஓட்டும் பொழுதும், ஒருவரை ஒருவர் தள்ளி விளையாடும் பொழுதும் தவறி விழுந்து பல் உடைதலும் உதடு அடி பட்டுக் கிழிந்து இரத்தம் வருதலும் அடிக்கடி ஏற்படுவது உண்டு.

**மணி :** மங்கை நிரம்ப அறிவு நிரம்பப் பெற்றவள். தான் அறிந்ததை அப்போதைக்கு அப்போது சொல்லித் தனது கருத்தைத் தெளிவு படுத்திக் கொள்கிறாள். அண்ணே ! மேலே சொல்லு.

**சங்கரன் :** இரத்தம் வெளியில் கொட்டுவது போலவே உடம்பின் உள்ளும் இரத்தக்குழாய் சிதைந்து இரத்தம் கொட்டுவது உண்டு.

நுரைஈரலில் இரத்தக்குழாய் சில சமயம் உடைந்து இரத்தம் கொட்டுதல் உண்டு. அப்பொழுது இரத்தத்

தசையை அவர்கள் வெளியில் உமிழ்வார்கள். அப்பொழுது அவர்களது கழுத்து உடையைத் தளர்த்த வேண்டும். தலையையும் தோளையும் உயர்த்திப் படுக்க வைக்கவேண்டும். பனிக்கட்டியைச் சூம்பச் செய்ய வேண்டும். மார்பின் மேல் பனிக்கட்டியை வைக்க வேண்டும்.

சில சமயம் இரப்பையில் இரத்தக்குழாய் உடைந்து இரத்தம் கொட்டுவது உண்டு. அப்பொழுது அவ்விரத்தம் வாயின் வழி வெளிவரும். அவ்விரத்தம் கருப்பாய் இருப்பதோடு சோறும் கலந்து இருக்கும். உடனே அவர்களைத் தலையை உயர்த்திப் படுக்கவைக்க வேண்டும். பனிக்கட்டியை வயிற்றின் மேல் வைக்க வேண்டும். பனிக்கட்டியைச் சூம்பும்படி அவர்களைச் செய்யவேண்டும்.

சில சமயம் மூக்கால் இரத்தம் கொட்டுவதும் உண்டு. மூக்கால் இரத்தங் கொட்டுபவனை தலைநிமிர்ந்து உட்காரும்படிச் செய்யவேண்டும். குனியவிடக்கூடாது. கழுத்து உடையைத் தளர்த்தி இருகைகளையும் தலைக்கு மேல் தூக்கிச் சிறிது நேரம் இருக்கும்படிச் செய்யவேண்டும். மூக்கின் நுனியிலும், கழுத்தின் பிடரியிலும், தோள் பட்டைகளின் நடுவிலும் ஈரத்துணியை அப்ப வேண்டும். இரத்தம் கொட்டுதல் உடனே நின்று விடும். இரத்தம் இன்னுங் கொட்டினால் பனிக்கட்டி கரைத்த நீரால் மூக்கின் உட்பாகத்தை அலம்ப வேண்டும். சில மணி நேரம் மூக்கைச் சிந்தக் கூடாது. மூக்கின் அடிப்பாகத்தைச் சிறிது அழுத்தியும் விடலாம்.

நாக்கு, ஈறு இவற்றில் இருந்தும் இரத்தம் வருதல் உண்டு, பனிக்கட்டியையாவது குளிர் நீரையாவது வாயில் அடக்கிக் கொண்டால் இரத்தம் கொட்டுதல் நின்று விடும்.

இரத்தம் கொட்டலிலும் வைத்தியர் வந்தவுடன் நோயாளியை அவரிடம் ஒப்படைக்கவேண்டும். மேலும் எந்தக் காரணத்தைக் கொண்டும் சூடான பொருளை நோயாளிக்குக் கொடுக்கக் கூடாது. குளிர்பானமே கொடுக்கவேண்டும்.

**மணி :** இரத்தம் உடம்பின் உள்ளே கொட்டுதலை எவ்வாறு அறியலாம் ?

**சங்கரன் :** உடம்பின் உள்ளே இரத்தம் கொட்டினால் மயக்கம் ஏற்படும். உதடு, முகம் வெளுத்து இருக்கும். நாடி துரிதமாக அடிக்கும். மூச்சு பதைபதைக்கும். கொட்டாவியும் வரும். இவைகளே அடையாளம் ஆகும்.

சில சமயம் மூளையில் உள்ள இரத்தக் குழாயும் உடைந்து இரத்தம் கொட்டுவது உண்டு. மூளைக்கும் மண்டை ஓட்டிற்கும் நடுவில் இரத்தம் கொட்டுவது உண்டு. இவைகளுக்கு எல்லாம் வைத்தியரின் உதவியை உடனே தேடவேண்டும்.

**மங்கை :** இதுவரையிலும் மணியே முடிவாகக் கூறி வந்தான். இத்தடவை நான் கூறுகிறேன் கேளுங்கள்.

நமது உடம்பில் மூன்று வகையான இரத்தம் உண்டு. அவையாவன :—

(1) தாதுக்கள் வழியாக இரத்தம் ஓடும். இது இருதயத்தில் இருந்து புறப்பட்டு உடல் பூராவும் ஓடுகிறது. இதுவே சுத்த இரத்தம். இது மிகச் சிவப்பாக இருக்கும். குபுகுபு என்று இது பாயும். இது வெளியே போய்க்கொண்டு இருந்தால் மரணம் துரிதமாகும்.

(2) நாளத்தின் வழியாக இரத்தம் ஓடும். இது உடம்பிலிருந்து இருதயம் நோக்கி ஓடுகிறது. இது அசுத்த இரத்தம் ஆகும். இது கருப்புக் கலந்த சிவப்பாய் இருக்கும். தடைப்படாத நீரோட்டம் போல நிதானமாய் இது பாயும். இதுவும் வெளியே போய்க்கொண்டு இருந்தால் மரணமே ஏற்படும்.

(3) தந்துகம் என்பது உடல் பூராவும் பரவி இருக்கும் மயிர் போன்ற குழாய்கள் ஆம். இதில் இரத்தம் கசியும்.

இரத்தம் காயத்தின்மேல் தானே உறையும். அது பிசின் போன்று காணப்படும். அதை ஒன்றும் செய்தல் கூடாது. அதற்கு முன் காயத்தின் மேல் கட்டை விரலால் அழுத்த வேண்டும். காயம் பட்ட இடத்தை மேலே தூக்கி வைக்கவேண்டும். உடைகளைத் தளர்த்த வேண்டும். குளிர் நீர், உருகிய பனிக்கட்டி என்ற இரண்டில் ஒன்றை காயத்தின் மேல் வைக்க வேண்டும். சூடான பானம் கொடுக்கக்கூடாது. கண்ணாடியால் காயம் ஏற்பட்டால் கண்ணாடித் தூள் காயத்தில் இருக்கும். அக்காலத்தில் மேற் கூறியதைச் செய்யக்கூடாது.

தாது, நாளம் என்ற இரு குழாய்களில் ஏதாவது

ஒன்றில் இரத்தம் வந்தால் காயத்திற்கும் இருதயத்திற்கும் இடையில் காயத்தின் பக்கத்தில் துணியால் இறுகக்கட்ட வேண்டும். இதனால் இரத்தம் கொட்டுவது நின்றுவிடும்.

தலைக்காயத்திற்கு கழுத்தில் உள்ள நாடிகளை இறுக அழுத்தவேண்டும். முகக் காயத்திற்கு முக வாய்க் கட்டையில் உள்ள நாடிகளை அழுத்த வேண்டும். பல்லில் இரத்தம் கொட்டினால் படிகாரம் கலந்த நீர் கொண்டு வாயைக் கொப்பளிக்க வேண்டும். பல் விழுந்த இடத்தில் பஞ்சை வைத்துச் சிறிது நேரம் அழுத்த வேண்டும். உதட்டில் இருந்து உதிரம் வந்தால் அதை இரு விரல்களின் மத்தியில் வைத்து அழுத்த வேண்டும்.

உடலின் உள் இரத்தம் கொட்டுதல் உண்டு. அக் காலம் மயக்கம் ஏற்படும். உதடு, முகம், வெளுத்துக் காணும். நாடி விரைந்து நடக்கும். மூச்சுப் பதை பதைக்கும். கொட்டாவியும் வரும்,

உடலினுள் இரத்தக் குழாய் ஐந்து இடங்களில் உடையும்.

1. நுரை ஈரலில் இரத்தக் குழாய் உடையும். அப்பொழுது இரத்தம் துப்பவேண்டியது ஏற்படும்.

2. இரைப் பையில் இரத்தக் குழாய் உடைதல் உண்டு. அதுகால் இரத்தம் வெளி ஏறும்.

3. மூளையில் இரத்தக் குழாய் உடைந்து இரத்தம் கொட்டும்.

4. மூளைக்கும் மண்டை ஓட்டிற்கும் மத்தியில் இரத்தம் கொட்டும்.

5. மூக்கிலும் இரத்தம் கொட்டும்.

இந்த ஐந்து இடங்களிலும் வைத்தியரையே கொண்டு பார்க்கவேண்டும். கிராமங்களில் மூக்கில் இரத்தம் ஒழுகுதலுக்குத் தெள்ளிய உப்புமண், தெள்ளிய எருப்பொடி, மூக்குப்பொடி முதலியவற்றை மூக்கில் போடுகின்றனர். அவ்வாறு செய்தல் கூடாது. மற்றைய இடங்களில் அவற்றைப் பற்றிக் கவனிப்பதே இல்லை. கவனியாது மரணத்திற்கு உள்ளாகிறார்கள்.

நுரை ஈரலில் இரத்தம் கொட்டினால் கழுத்து உடையைத் தளர்த்த வேண்டும். தலையையும் தோளையும் உயர்த்திப் படுக்க வைக்கவேண்டும். மார்பின் மேல் பனிக் கட்டியை வைக்கவேண்டும். குளிர் பானமே கொடுக்க வேண்டும்.

இரைப் பையில் இரத்தம் கொட்டினால் சோற்றுடன் கருப்பான இரத்தம் வெளிவரும். இரப்பையின் மேல் பனிக் கட்டியைக் கட்டுவதோடு உடைகளைத் தளர்தித் தலையும் தோளும் உயரமாக இருக்கும்படிப் படுக்க வைத்துக் குளிர்பானம் கொடுக்க வேண்டும்.

மூக்கில் இரத்தம் ஒழுகினால் தலை நிமிர்ந்து உட்கார வேண்டும். கழுத்துடையைத் தளர்த்த வேண்டும். இருகைகளையும் உயரத் தூக்கி நிறுத்த வேண்டும். குளிர் நீரில் தோய்த்த துணியை மூக்கின் அடியிலும்

கழுத்தின் பிடரியிலும், தோள்பட்டையின் நடுவிலும் போடவேண்டும். இது செய்ததற்குப் பின்னும் இரத்த ஒழுக்கு இருந்தால் பனிக்கட்டி கரைத்த நீரால் மூக்கின் உட்புறத்தை அலம்பவேண்டும். மூக்கின் அடிப்பாகத்தை அழுத்த வேண்டும். சிலமணி நேரம் மூக்கைச் சிந்தாமல் இருக்க வேண்டும்.

நாக்கு, ஈறு இவற்றில் இரத்தம் கொட்டினுல் பனிக்கட்டி, குளிர் நீர் இவற்றை வாயில் அடக்க வேண்டும்.

**சங்கரன் :** மங்கை அம்மையே! அழகாகக் கூறினுய். அப்பாவிடமும் நீ அப்புறஞ் சொல்ல வேண்டும்.

---

## 7. மயக்கம் போடுதலுக்குச் செய்யவேண்டிய முதல் உதவி

---

**சங்கரன் :** ஏ, மங்கை! அடே, மணி! இருவரும் வாருங்கள். தமிழரசியை வேண்டும் என்றாலும் இங்கே தூக்கி வாருங்கள். இன்று மயக்கம் ஒருவனுக்கு ஏற்பட்டால் முதலில் நாம் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றிக் கூறப் போகிறேன். தலைப்பு சம்பந்தமாகத்தான் நீங்கள் என்னிடம் கேள்வி கேட்கலாம். சந்தேகம் இருந்தால் பின் கேட்டுக் கொள்ள வேண்டும்.

**மணி :** மயக்கத்தின் அறிகுறிகள் யாவை ?

**சங்கரன் :** கண்களைத் தொட்டால் இமை அசையாது. பாதத்தில் சுரண்டினால் உணர்ச்சி இராது. கை, கால்களைத் தூக்கினால் இரும்புக் குண்டு போன்று கனமாய் இருக்கும். அவைகளை உயரத்தில் இருந்து விட்டுவிட்டால் அவை தொப்பென்று கீழே விழும். செத்த பிணம் மாதிரியே இருப்பான். இவைகளே மயக்கங் கண்டவனுக்குக் காணும் அறிகுறிகளாம்.

**மங்கை :** எனது சிவகாமி அத்தைக்கு முன்னால் இது ஏற்பட்டது என்று கூறுவர். ஆகவே இதற்குப் பொதுவாய் செய்ய வேண்டிய முதல் உதவி யாது ?

**சங்கரன் :** முதலில் வழக்கம்போல் வைத்தியருக்கு ஆள் அனுப்பவேண்டும். மயக்கத்தில் இருப்பவனை

முதுகு தரையில் படும்படிப் படுக்க வைக்கவேண்டும். முகம் சிவந்து இருந்தால் தலையையும் தோளையும் ஒரு தலையணையில் உயர்ந்து இருக்கும்படிப் படுக்க வைக்க வேண்டும். முகம் வெளுத்து இருந்தால் தலையும் உடலும் சம உயரத்தில் இருக்கும்படிப் படுக்க வைக்கவேண்டும். அவனது உடைகளைத் தளர்த்த வேண்டும். வீட்டின் சாளரங்களைத் திறந்துவிட வேண்டும். நல்ல காற்று வீசும்படி செய்ய வேண்டும். முகத்தில் இழுப்பு ஏற்பட்டால் பற்களின் நடுவில் கைவிரல் அளவு உள்ள எப்பொருளையாவது சொருக வேண்டும். உடம்பைச் சூடாகவும் தலையைக் குளிர்ச்சியாகவும் செய்ய வேண்டும். சந்தடி இல்லாத இடத்தில் வைத்து நோயாளியைப் பாதுகாக்க வேண்டும். மூச்சு நின்று இருந்தால் உயிர் உற்பத்தி செய்யவேண்டும். வைத்தியர் வரும் வரை மயக்கத்தில் இருப்பவருக்கு உதவி செய்து அவரைக் காத்தல் வேண்டும்.

**மணி :** தலையில் அடி, காயம் பட்டதனால் மயக்கம் ஏற்பட்டால் செய்யவேண்டியது யாது ?

**சங்கரன் :** தலையில் அடி, காயம் பட்டதனால் மயக்கம் அடைந்து இருந்தால் அவனை மல்லாந்து படுக்க வைக்க வேண்டும். அதாவது அவன் முகம் ஆகாயம் பார்க்கும் படி படுக்க வைக்கவேண்டும். ஈரத் துணியால் ஒத்தடம் போட வேண்டும். அவன் இருக்கும் இடத்தில் சந்தடி இல்லாது இருக்க வேண்டும். அவனுக்குப் பானங்கள் கொடுக்கக்கூடாது. நல்ல காற்று அவன் இருக்கும்

இடத்தில் அடித்தாலே போதும். சிறிது நேரத்தில் அவன் மயக்கம் தெளிந்து எழுந்திருப்பான்.

**மங்கை :** அங்க விகிர்தி என்றால் என்ன ? அதன் குணங்கள் யாவை ? அதற்கு முதல் உதவி எவ்வாறு செய்யவேண்டும் ?

**சங்கரன் :** மூளையில் இரத்தக்குழாய் உடைவதால் அங்க விகிர்தி என்ற கொடிய நோய் ஏற்படுகிறது. அங்கங்கள் அவற்றின் வேலையை ஒழுங்காய்ச் செய்யாத தால் அது அங்க விகிர்தி என்று பெயர் பெற்றது.

அந்நோய் கண்டால் வாய் கோணும். தாடைகள் உப்பி உப்பி அடங்கும். முகம் சிவந்து காணும். சுவாசம் மிகக் கோரமாய் இருக்கும். கண்கள் உணர்ச்சி அற்றுப் போம். நாடி வேளைக்கு வேளை தளர்ந்து போம். இவை களே இந்நோயின் குணங்களாம்.

இந்நோய் கண்டவனை மல்லாந்து படுக்கும்படி செய்து, ஈரத்துணியால் ஒத்தடம் இட்டு, அவன் இருக்கும் இடத்தில் சந்தடி ஏற்படாது செய்து, நல்ல காற்று அவன் மேல் வீசும்படி செய்தல் வேண்டும். வைத்தியர் வந்ததும் அவனை அவரிடம் சேர்க்கவேண்டும். அவர் வரத் தாமதித்தால் அவர் இருக்கும் இடம் தேடி அவனைச் சேர்க்க வேண்டும்.

**மணி:** காக்காய் வலி, கோரணி என்னும் நோய் உள்ளவர்களிடம் காணும் மயக்கத்திற்கு என்ன செய்ய வேண்டும் ?

**சங்கரன் :** காக்காய் வலி, கோரணி என்னும் நோய் உள்ளவர்களிடம் மயக்கம் மின்னலைப்போல் ஒரு நொடி

யில் வரும். நோயாளி கூச்சல் இடுவான். உடனே கீழே விழுந்து விடுவான். அவனது உடல் உறுப்புக்கள் இழுக்கும். விரல்களை அழுத்தமாய் மடக்கி வைத்து இருப்பான். வாயில் நுரை வரும். தலை கோணும். கண்மணிகள் இறுகும். இவைகளெல்லாம் ஒன்று, இரண்டு நிமிடங்களில் நடக்கும். பிறகு நோயாளி அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்து விடுவான்.

அவனது வாயைத் திறந்து பற்களின் நடுவில் விரல் அளவு உள்ள கனத்த பொருளைச் சொருக வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் பல் நன்ருகப் பூண்டுவிடும். இழுப்பு அதிகம் ஆகும். நாக்கையும் கடித்துக்கொள்ளு வான். அவனது உடல் உறுப்புக்களும் தரையில் தோய்ந்து புண்படும்.

அப்பேர்ப்பட்ட அவனைத் தலையணையில் சார்த்தி வைக்க வேண்டும். அவன் கண்டபடி விழுந்து காயப் படுத்திக்கொள்ளாது பார்த்துக்கொள்ளவேண்டும். அவன் தூங்கத் தொடங்கிஞல் அவனைத் தடுக்காது நன்ருகத் தூங்கும்படிச் செய்தல் வேண்டும்.

**மங்கை :** சிறு பிள்ளைகளுக்கு ஏற்படுகிற மயக்கத் திற்கு யாது செய்யவேண்டும் ?

**சங்கரன் :** சிறு பிள்ளைகளுக்கு மாந்தக்கோளாறு களால் மயக்கம் ஏற்படுவது உண்டு. வைத்தியருக்கு உடனே ஆள் அனுப்ப வேண்டும். குழந்தையைப் பத்து நிமிடம் வெந்நீரில் வைக்கவேண்டும். தலையில் மாத்திரம் ஈரத் துணியைப் போடவேண்டும்.

**மணி :** வெயிலில் அலைவதால் ஏற்படும் மயக்கத்திற்குச் செய்யவேண்டியது யாது ?

**சங்கரன் :** வெயிலில் அலைந்து திரிவதால் மயக்கம் நிச்சயமாய் ஏற்படும். அப்பொழுது கண்கள் குறுகும். முகம் சிவக்கும். இவைகளே அதன் அறிகுறிகள் ஆம்.

குளிர்ந்த நீரில் நனைத்த துணியை அவனது உடம்பிலும் தலையிலும் பரப்பவேண்டும். குளிர்நீர்ப் பானம் அவன் அருந்தும்படிச் செய்யவேண்டும்.

**மங்கை :** மின்சாரத்தால் ஏற்படும் கோளாறுக்குச் செய்யவேண்டியது யாது ?

**சங்கரன் :** மின்சாரக் கம்பியைத் தொட்டுவிட்டால் கையை உடனே எடுக்கமுடியாது. கையை எடுத்ததும் ஒரு பெருங் கூச்சல் இடுவான். பின் கீழே விழுந்து விடுவான். அவனைத் தொடுகின்றவர்கட்கும்அதேகதிதான் ஏற்படும். ஆகையால் பலகை, கட்டை, கம்பளி முதலியவற்றில் ஏதாவது ஒன்றின்மேல் நின்று அவனைக் கவனிக்க வேண்டும். அவனுக்குச் சுடுபானம் தாராளமாய்க் கொடுக்கலாம். அவனைத் தரையோடு தரையாய்ப் படுக்கவைத்துச் சூடு உண்டாக்கவேண்டும். வேண்டுமானல் உயிர் உற்பத்தியும் செய்யவேண்டும்.

**மணி :** மின்னல் அதிர்ச்சிக்குச் செய்யவேண்டியது யாது?

**சங்கரன் :** முன் கூறிய மின்சாரக் கம்பியைத் தொட்டதால் ஏற்பட்ட அதிர்ச்சிக்குச் செய்த உதவியையே இதற்கும் செய்யவேண்டும்.

**மங்கை** இசுட்டீரியாவின் குணம் என்ன? செய்ய வேண்டியது யாது?

**சங்கரன் :** இசுட்டீரியா என்ற நோய் பெண்களுக்கு உரியது. இது நீலிநோய் என்றும் பெயர் பெறும். அதிக சுகமோ அல்லது மிதமிஞ்சிய துக்கமோ ஏற்பட்டால் இந் நோயால் பீடிக்கப்படுவர். சில சமயங்களில் காரணம் இல்லாதும் இது ஏற்படும். இது கொண்டவள் சிரிப்பாள். அழுவாள். கூத்து ஆடுவாள். அதிகமாகப் பேசுவாள். அசையாது ஓர் இடத்து நிற்பாள். படுத்துக்கொண்டு உடலை ஆட்டுவாள். விரல்களை அழுத்தமாய் மூடிக்கொள் வாள். அவள் கண் விழிகள் மேல் வட்டமாக உருளும். பாதி நினைவுதான் இருக்கும்.

தன்னை எல்லாரும் பாராட்டவேண்டும். என்று இவள் எண்ணுகின்றுள். அதை உடனுக்கு உடன் மறுக்க வேண்டும். அவள் நினைவை மட்டம் தட்டவேண்டும். இதுவே இதற்குரிய தகுந்த மருந்து ஆகும்.

இவளைக்கண்டு அன்பின் மிகுதியால் அனுதாபங் கொள்ளும் உறவினர்களை இவள் பக்கத்தில் இருக்கும்படி செய்தல் கூடாது. 'தண்ணீரைத் தலையில் கொட்டி விடு வேன்' என்று இவளைப் பயம் உறுத்தல் வேண்டும். நீலித் தனம் செய்தால் தண்ணீரைத் தெளித்தல் வேண்டும். அதற்காக அவளை மிகவும் கொடூரமாக நடத்தல் கூடாது. நீலிநோய் மற்றொரு நோயின் கிளை நோயாகும். மூல நோயைக் கண்டுபிடிக்க வேண்டும். கண்டு பிடித்து அதற்கு உரிய முதல் உதவியைச் செய்யவேண்டும்.

**மணியும், மங்கையும் :** இன்று சங்கரன்பாடு வேட்டைதான். ஒரே சொற்பொழிவு. தலைப்பை விட்டு அக்கம் பக்கம் போகவில்லை. இவ்வளவு பேசுகிற நீ சொற்பொழிவுப் போட்டியில் தோற்று விடுகின்றாயே! வேறு ஒருவனுக்கு வெற்றி என்றால் அவன் உன்னைக் காட்டிலும் சிறந்த பேச்சாளியாக அல்லவா இருக்க வேண்டும்.

'வல்லவனுக்கு வல்லவன் இவ்வையகத்தில் உண்டு'.

---

## 8. விட உபாதைகளுக்கு உரிய முதல் உதவி

பழையபடி ஒருநாள் சங்கரன், மணியையும் மங்கையையும் அழைத்தான். இருவரும் சங்கரன் அண்டை வந்தனர். மூவரும் ஓர் இடத்தில் அமர்ந்தனர். அன்றையப் பேச்சை மங்கை தொடங்கினாள்.

**மங்கை :** எங்கள் வகுப்புப் பையன் ஒருவன் நேற்று விடம் உண்டானும். உடனே மயங்கி விட்டானும். அவனைப் பெற்றோர்கள் மருத்துவ நிலையம் எடுத்துச் சென்றனராம். ஆங்கு வைத்தியர் ஏதேதோ செய்தாராம். இன்று அவன் சுகமாக இருக்கின்றான் என்று கேள்வி. ஆகவே சங்கரசித்தப்பா! விடத்தினால் ஏற்படும் உபாதைக்குச் செய்ய வேண்டிய முதல் உதவி பற்றி இன்று எங்களுக்குச் சொல்லு. நாங்கள் கேட்கிறோம்.

**சங்கரன் :** அரிக்கும் விடம், எரிக்கும் விடம், மயக்கும் விடம் என விடம் மூன்று வகைப்படும்.

**மங்கை :** முதலில் அரிக்கும் விடம் பற்றிக் கூறு.

**சங்கரன் :** ஏது, இன்று மங்கை சுறுசுறுப்பாகக் காண்கின்றாள். சரி. முதலில் அரிக்கும் விடம்பற்றிக் கூறுகிறேன், கேள்.

கந்தக திராவகம், உப்புத்திராவகம், வெடியுப்புத் திராவகம், சோடாகார உப்புத் திராவகம், நவச்சாரம், கார்பாலிக்குத் திராவகம் முதலியவை அரிக்கும் விடத்தைச் சேர்ந்தவைகளாம்.

இவற்றை உண்டால் உதடு, வாய், தொண்டை சுருங்கும். அவற்றில் வெள்ளைக்கறையும் ஏற்படும். பேச்சுங்கூடத் தடுமாறும். வாய், தொண்டை, வயிற்றில் எரிச்சல் காணும். இரத்தம் கலந்த வாந்தி ஏற்படும்.

இதற்கு வாந்தி ஏற்படும் மருந்தைக் கொடுக்கக் கூடாது. கொடுத்தால் வயிற்றுப்பை கிழிந்துவிடும். ஆகவே விடத்தைக் குறைக்கக் கூடிய தண்ணீர், பார்லிக் கஞ்சி, பால், முட்டை முதலியவற்றைக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டும். உட்கொண்ட விடம், கந்தகம், உப்புத்திராவகம் ஆயின், சாக்குக்கட்டி, சுவரில் பூசும் சுண்ணும்பு முதலியவற்றைக் கொடுக்கலாம். கார்பாலிக்குத் திராவகம் ஆயின், பேதி உப்புக் கொடுக்க வேண்டும். காய்ச்சு உப்புக்களானுல், காடி, எலுமிச்சம் பழச்சாறு, புளி இவற்றை நீரில் கலந்து கொடுக்கலாம்.

**மணி :** எரிவிடம் பற்றி அடுத்தபடியாகச் சொல்லு.

**சங்கரன் :** பாடாணம், எட்டிக் கொட்டைச் சத்து, பாதரசம், அரிதாரம், பொன்னரிதாரம், தகட்டரிதாரம், குதிரைப் பல் பாடாணம், ஈயம், செம்பு, துருசு, சுண்ணும்பு, மண்ணெண்ணெய், கற்பூரத்தைலம், அழுகிய மீன், அழுகிய மாமிசம் முதலியவை எரிக்கும் விடம் ஆகும்.

இவற்றை உண்டால் வயிற்றிலும், குடலிலும் வலி ஏற்படும். வாந்தியும் பேதியும் ஏற்படும். மயக்கமும், உடம்பில் பிடிப்பும் ஏற்படும்.

இவ்விடத்தில் வாந்தியை உண்டுபண்ணும் மருந்து கொடுக்க வேண்டும். உப்புக் கலந்த வெது வெதுப்பான

நீர் கொடுக்கவேண்டும். கொடுத்தால் வாந்தி ஏற்படும். வாந்தி ஏற்படவில்லையானால், உடனே வயிற்றைக் கழுவ வேண்டும். ஒரு கெசம் நீளம் உள்ள இரப்பர் குழாயை எடுத்து அதில் இருபது அல்லது இருபத்தைந்து அங்குல நீள இரப்பரை விடம் உண்டவன் விழுங்கும்படிச் செய்ய வேண்டும். பிறகு அவன் தலைக்குமேல், குழாயை உயர்த்தி அதன் வழியாகத் தண்ணீரை வயிறு கொள்ளும் அளவு விடவேண்டும். பின் அக்குழாயை வயிற்றுக்குக் கீழ் வரும்படித் தாழ்த்தினால் வயிற்றில் உள்ளவை எல்லாம் வெளியே வந்துவிடும். இது மாதிரி பல தடவை செய்யவேண்டும். அதன்பின் எரிச்சலை மட்டுப்படுத்தும் பானங்கள் ஆகிய பால், நீர் முதலியன கொடுக்கவேண்டும்.

கண்ணாடித்தூளை விழுங்கி இருந்தால் ரொட்டி, உருளைக்கிழங்கு, சோறு, வாழைப்பழம், முதலியவை முதலில் கொடுக்கவேண்டும். அதன் பின் வாந்தி மருந்து கொடுக்கவேண்டும்.

மண்ணெண்ணெய், தீமுறுபாடாணம் (தீக்குச்சியில் உள்ளது) உட்கொண்டு இருந்தால் வாந்தியை உண்டு பண்ணவேண்டும். எக்காரணம் கொண்டும் எண்ணெய் தரக்கூடாது.

**மங்கை :** மயக்கத்தை உண்டாக்கும் விடத்தை எவ்வாறு நீக்கலாம் ?

**சங்கரன் :** இன்று மணி, ஏது சொல்வதை எல்லாம் கேட்டுக்கொண்டு சும்மா இருக்கின்றான்.

அபின், கஞ்சா, கள், சாராயம், ஊமத்தை, எட்டி முதலியவை மயக்கம் தரும் விடம் உடையவை.

இவற்றை உண்டால் அதிக உறக்கம் ஏற்பட்டுக் கடைசி யில் உணர்வும் இல்லாது போய்விடும். அபினியானல் கண்மணி ஊசி முனைபோல் குறுகும். மூச்சு வெகு மெதுவாயும் அழுத்தமாயும் கேட்கும். ஊமத்தை விட மாஞல் கண்மணி விரிவு அடையும்.

இவற்றை உண்டவனைத் தூங்கவிடக் கூடாது. வாந்தி ஏற்படும் மருந்து கொடுத்து வாந்தி எடுக்கும்படிச் செய்யவேண்டும். களைப்பை நீக்கச் சுடுபானம் கொடுக்க வேண்டும்.

மங்கையே! மணியே! நீங்கள் இருவரும் முதல் உதவி பற்றி நன்கு தெரிந்து கொண்டீர்கள். இன்னும் ஒன்று தான் பாக்கி இருக்கிறது. அதை நாளை உங்களுக்குச் சொல்லுகின்றேன். இன்று கேட்டதை மணி சொல்லட்டும்.

**மணி** : அரிக்கும் விடம், எரிக்கும் விடம், மயக்கும் விடம் என்று விடம் மூன்று வகைப்படும்.

(1) கந்தக திராவகம், காசுடிக்குசோடா, வெடி உப்புத் திராவகம், கார்பாலிக்கு அமிலம் என்பவை அரிக்கும் விடத்தைச் சார்ந்தவையாம்.

இவற்றை உண்டால் உதடு சுருங்கும். வெள்ளைக் கறை காணும். வயிற்றில் வலி இருக்கும். மயக்கம் உண்டாகும். பேச்சுத் தடங்கலும் ஏற்படும்.

பொதுவாக விடத்தை வெளிப்படுத்த ஒக்காளம் செய்விப்பது உண்டு. ஆனல் அரிக்கும் விடத்திற்கு

உரிய மருந்து கொடுத்தல் கூடாது. கொடுத்தால் இரைப்பை கிழிந்துவிடும். விடத்தைக் குறைக்கத் தண்ணீர், பால், முட்டை முதலியவற்றைக் கொடுத்துக் கொண்டே இருக்கலாம்.

(2) பாடாணம், அரிதாரம், பொன் அரிதாரம், தகட்டு அரிதாரம், குதிரைப்பல் பாடாணம், யாதரசம், ஈயம், செம்பு, துருசு, கண்ணாடி, மண்ணெண்ணெய், அழுகிய மீன், ஆட்டுக்கறி முதலியவை எரிக்கும் விடங்களாகும்.

இவற்றைச் சாப்பிட்டால் அடிவயிற்றிலும் மேல் வயிற்றிலும் வலி ஏற்படும். ஓக்காளம், பேதி, மயக்கம், உடம்பில் பிடிப்பு முதலியவை ஏற்படும்.

இதில் விடத்தை ஓக்காளம் செய்யும்படி செய்தல் வேண்டும். உப்புக்கலந்த வெந்நீர் உண்டால் ஓக்காளம் ஏற்படும். அதில் ஏற்படாவிட்டால் வயிற்றைக் கழுவ வேண்டும். அதாவது ஒரு கெசம் நீளம் உள்ள இரப்பர் குழாயில் இருபது அல்லது இருபத்து ஐந்து அங்குல நீளம் நோயாளியை விழுங்கும்படி செய்ய வேண்டும். பிறகு அக்குழாயை அவன் தலைக்குமேல் உயர்த்திப் பிடிக்க வேண்டும். அதன் வழியாக வயிறு கொள்ளும் அளவு தண்ணீரைச் செலுத்தவேண்டும். அவ்வாறு செய்த பின் அக்குழாயை வயிற்றுக்குக் கீழ் இருக்கும்படி செய்ய வேண்டும். வயிற்றில் உள்ள பொருள்கள் எல்லாம் வந்து விடும். இப்படிப் பலமுறை செய்ய வேண்டும். அதன் பிறகு பால், சூடான பானம் முதலியன கொடுக்க வேண்டும்.

கண்ணுடித் தூள் விழுங்கி இருந்தால் சோறு, வாழைப்பழம் முதலியவற்றைத் தாராளமாகக் கொடுத்து ஓக்காளம் எடுப்பதற்கு வழி செய்ய வேண்டும்.

3. அபினி, கஞ்சா, கள், எட்டி, ஊமத்தை முதலியவை மயக்கும் விடங்களாகும். முதலில் தூக்க மயக்கம் ஏற்படும். அதன்பின் மூர்ச்சையாவான். அபினி தின்றால் கண்மணி ஊசி முனைபோல் குறுகும், மூச்சு மெதுவாயும் அழுத்தமாயும் இருக்கும். ஊமத்தை தின்றால் கண்மணி விரிவு அடையும். விடம் உண்டவனைத் தூங்க விடுதல் கூடாது. நடக்கச் செய்யவேண்டும். நன்றாக வாந்தி எடுத்தபின் சூடான பானம் கொடுக்கவேண்டும்.

**சங்கரன் :** நன்றாகக் கூறினாய். இனி நாம் கடைசியாக நாளைக் கூடுவோம்.

## 9. விடக் கடிக்கு உரிய முதல் உதவி

**மங்கை :** ஏ, மணி! ஏ சங்கர சித்தப்பா! இன்றேடு நீ இதுவரை சொல்லிவருகிற முதல் உதவி முடிவடைகிறது அல்லவா? தேள் கடித்தால் என்ன செய்ய வேண்டும்?

**மணி :** ஏ அண்ணே! எனது அக்காள் கோதை ஆனந்தத்திற்குத் தேள் கடித்தால் வலி இராது. அது உனக்குத் தெரியுமா? நம் அன்னேயாரின் கருப்பத்தில் அவள் இருக்கும்பொழுது நமது அன்னேயாரைத் தேள் கடித்ததாம். ஆகவே தேள் விடம் இப்பொழுது அவளே ஒன்றும் செய்வது இல்லே. எறும்பு, ஈயைப் போன்று தேளேயும் ஒன்ருகக் கருதி அவள் அதனே எடுத்து எறிகிருள்.

**சங்கரன் :** தேள்கடிக்கு நீ சொல்வது நல்ல மருந்துதான். எல்லாரும் கருப்பத்தில் இருக்கும்பொழுது, அவர்களேக் கருப்பத்தில் கொண்டு இருக்கிற தாய்மார்களே எல்லாம் தேள் கடிக்குமா?

**மணி :** நீ சொல்கிற கருத்தில் நான் சொல்லவில்லே. தேள்கடி என்றவுடன் அவளேப்பற்றி ஞாபகம் வந்தது; கூறினேன். வேறு ஒன்றும் இல்லே. தேள் கடிக்குச் செய்ய வேண்டிய முதல் உதவியைச் சொல், கேட்கலாம்.

**சங்கரன் :** தேள் கடித்த உடன் ஒரு ஊசியால் குத்தினதுபோல் இருக்கும். பின் பல ஊசிகள் கொண்டு குத்துகிறது போல பொறுக்க முடியாத வலி ஏற்படும். கடிவாயைச் சுற்றிக் கீறி விடவேண்டும். அதன்மேல்

வெங்காயம் அல்லது புகையிலைச் சாற்றைத் தேய்க்க வேண்டும்.

சிறு குழந்தையைத் தேள் கொட்டுமேயானல் அக்குழந்தை இறப்பது உறுதி. ஆகவே வைத்தியரின் உதவியை உடனே நாடவேண்டும். ஊசி போடும்படி செய்யவேண்டும்.

**மணி :** சரி, அடுத்து பாம்புக் கடியைப்பற்றி விளக்கு. அதுவும் மிக மிக முக்கியமானதுதான்.

**மங்கை :** பிச்சைக்கு வருகிறவன் கொண்டுவரும் பாம்பைப் பார்த்தமாத்திரத்தே நமக்குப் பயமாய் இருக்கிறதே! ஆகவே அவசியம் நாம் பாம்புக் கடியைப் பற்றித் தெரிந்துகொள்ளவேண்டும்.

**சங்கரன் :** விடப்பாம்பு கடித்தால் ஓர் அங்குல நீளத்தில் இரண்டு காயங்கள் தெரியும். விடம் இருதயத்தை அடைந்ததும் மரணம் உறுதியாய் ஏற்படும். ஆகையினல் கடிவாய்க்குப் பக்கத்தில் அதற்கும் இருதயத்திற்கும் இடையில் இரத்தக் குழாயை இறுக்கிக் கட்ட வேண்டும். பிறகு கடிவாயைக் கத்தியால் கீறிவிட வேண்டும். பின் இரத்தத்தை வெளியே போக்கவேண்டும். வாயில் புண் இல்லாமலிருக்கும் ஒருவனை வாயை வைத்து இரத்தத்தை உறிஞ்சி உறிஞ்சி எடுத்து உமிழும்படி செய்யவேண்டும். பின் சாராயத்தை வாயில் விட்டு நன்கு கழுவிக் கொப்பளிக்க வேண்டும். இதனைச் செய்ய எல்லாரும் பயப்படுவார்கள். ஆகையால் கொள்ளிக் கட்டையையாவது பழுக்கக் காய்ச்சின கம்பியையாவது

கடிவாயில் வைத்து நன்கு அழுத்த வேண்டும். அப்பொழுது விடம் எரிந்து விடும். பிறகு இரணத்திற்கு வைத்தியரைக்கொண்டு பார்க்க வேண்டும். கடிபட்டவனுக்கு ஏற்படுகிற அயர்ச்சியை உடனே போக்க வேண்டும்.

**மணி :** நீ சிறுபிள்ளையாய் இருக்கும்பொழுது உன்னை நாய் கடித்தது ஞாபகம் இருக்கிறதா? என்னையும்கூட அது ஒருமுறை கடித்து விட்டது. வெறி நாய் கடித்தால் செய்யவேண்டியது யாது?

**சங்கரன் :** வெறி நாயின் விடம் பாம்பு விடத்தை விடக் கொடியது. கடித்த நாயைக் கொல்லக் கூடாது. கடித்தபின் பத்து நாட்கள் வரை கடித்த நாய் உயிருடன் இருக்கிறதா என்று கவனித்து வரவேண்டும். ஒரு நாய் ஒருவனைக் கடித்த பத்தாவது நாளுக்குள் இறந்துவிட்டால் அது வெறி நாய் என்று கொள்ள வேண்டும். எந்த நாய் கடித்தாலும் பாம்புக் கடிக்கு உரிய முதல் உதவியைச் செய்யவேண்டும். கடிபட்டவன் வைத்தியரிடமே செல்ல வேண்டும். அவர் கூனூரில் இருக்கிற 'பாசுடீயர் மருத்துவ நிலையத்'திற்குத் தந்தி கொடுத்து, அங்கிருந்து ஊசி வந்ததும் போட்டுக் குணப்படுத்துவார். பத்து நாட்கள் வரை கடியினால் உபாதை இல்லாவிட்டாலும் விடம் இரத்தத்திலேதான் தங்கி இருக்கும். எனவே அதற்கு உரிய சிகிச்சையை எடுத்துக் கொள்ளவில்லையானால் தண்ணீரைக் கண்டு பயப்படும் ஒரு நோய் ஏற்படும். கடிவாயைச் சுற்றி ஒருவித ஊரல் ஏற்படும். தொண்டை அடிக்கடி அடைக்கும். நாளடைவில் நீர் ஆகாரம்கூட உண்ணமுடியாது. இறப்பே இதன் முடிவாகும்.

வெறியடைந்த பூனை, சிலந்தி முதலியன கடித்தாலும் சிகிச்சை செய்து கொள்ள வேண்டும்.

மணி! மங்கை! இத்துடன் முதலுதவி முடிவடைகிறது. நீங்கள் நாளையிலிருந்து என்ன செய்ய வேண்டும் தெரியுமா?

**மங்கை :** எனக்குத் தெரியும் சித்தப்பா! நாளைக்கே கடைக்குச் சென்று முதலுதவிப் பெட்டி ஒன்று வாங்கி வந்து மக்களுக்குத் தொண்டு செய்வேன்.

**மணி :** சரி, சாப்பிட நேரமாகிவிட்டது. வாருங்கள், போகலாம்.

மறுநாள் அம்மூவரும் கடைக்குப்போய் தலைக்கொரு முதல் உதவிப்பெட்டி ஒன்று வாங்கி தங்களால் முயன்ற முதல் உதவியை மக்களுக்குச் செய்து வருகின்றனர். அது போல் இதைப்படித்த யாவரும் தங்களால் இயன்ற சேவையை நாட்டிற்குச் செய்து நன்மை அடைவார்களாக.

---

கூட்டுறவு அச்சகம் மதுரை